கறைகளைத்
தண்ணீரால் கழுவினாலும்
நிறம் மங்காத
ஒரே சுவர் பெயிண்ட்

Tractor
SYNTHETIC
WASHABLE
DISTEMPER
5
KILOS
ASIAN PAINTS



சுவர்களுக்கு வண்ணமயமான
பாதுகாப்புக்கு— ஏஷியன் பெயிண்ட்ஸ்

A.YARS.AT2. 384 TM

# வாழ்க்கை இன்பத்துக்கு எல்லையேது பஜாஜ் சாதனங்கள் இருக்கும்போது!

## குளிர் காலத்தில் வெதுவெதுப்பு!

உங்கள் வீட்டில் வெதுவெதுப்பான சுகமளிக்கும் சூழ்நிலையை உண்டாக்க விரும்பினால், பஜாஜ் சாதனங்கள் உங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்யும். உண்மையில், பஜாஜ் சாதனங்கள் அனைத்துமே சுகவாழ்வுக்காகத் தயாரிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, ரூம் ஹீட்டர் இம்மர்ஷன் ஹீட்டர், போர்ட்டபிள் கீஸர், வாஷிங் மெஷின் முதலியவை.

தவிர பஜாஜ் கம்பெனிக்கு மட்டுமே நாடெங்கிலும் 3,500 விற்பனையாளர்களும், 16 கிளை அலுவலகங்களும் உள்ளன. இதன் மூலம் நாங்கள் விற்பனைக்கு முந்திய-பிந்திய சேவைகளைத் திறம்பட ஆற்றி வருகிறோம்.





**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45—47, வீர் நரிமன் ரோடு, பம்பாய்—400 001

இந்தியாவெங்கிலும் கிளைகள் உள்ளன.




heros/BE-178 TAM

மூன்று மாதங்களுக்கு மேலான குழந்தைகளுக்கு
அமுல் தரும் ஒரு புதிய முக்கிய உணவு

# பாலஅமுல்

குழந்தையின் முதல் தானிய துணை உணவு
எளிதில் சீரணிக்கக் கூடிய புரதச் சத்து நிரம்பியது.

## மூளையும் உடலும் முழுமையாக வளர

உங்கள் குழந்தை, பிறந்த மூன்றாவது மாதத்திலிருந்து, பால் குடிப்பதுடன், தானிய துணை உணவுகளையும் உட்கொள்ளுகிறது அல்லவா? சாதம், கூழ், வாழைப் பழம் போன்ற வழக்கமான உணவுகள் உங்கள் குழந்தைக்குப் போதுமான புரதச் சத்துக்கள் வழங்குவதில்லை; ஏனெனில் அவற்றில் மாவுப்பொருள் அதிகமாக உள்ளது. முதல் இரண்டு ஆண்டுகளில், போதிய புரதச்சத்து தந்தால்தான் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் சீராக வளரும். பாலஅமுல் ஒரு சரிவிகித சத்துணவு. அதில் தரமுயர்ந்த பால் மற்றும் தாவர புரதச் சத்துக்கள் நிறைய உள்ளன. வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் மிகுந்துள்ளன. இவற்றால் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் முழுமையாக வளர உறுதி கிடைக்கிறது.

வேலூரிலுள்ள கிறிஸ்டியன் மெடிகல் காலேஜ் அண்டு ஹாஸ்பிடலின் டாக்டர்கள் குழந்தைகளுக்குப் பாலஅமுல் புகட்டிப் பரிசோதனைகள் செய்து சிறந்த பயன் கண்டிருக்கிறார்கள்.






கைரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்பரேடிவ்
மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன், ஆனந்த், குஜராத்.

# எழிலரசி-
# ராய்ப்பூர்
# இளவரசி
# யாரோ?

ராய்ப்பூர் மில்ஸ்

துணிகள்

CMLB.30.162 8 TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜெ. எல். படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு, சென்னை-1, 76, கிழக்கு மாரட் தெரு, மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. வெங்கடேஷ் 234, 244, என். எஸ். ஸி. போஸ் ரோடு, சென்னை-1, M/S. கல்யாணீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.

# நாங்கள் எங்களின் சுயபலத்தில் நிற்க இயலாது என்று யார் சொன்னது?

அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்பூரில் நம் நாட்டின் முதல் எஃகுத் தொழிற்சாலை நிறுவப்பட்ட காலந்தொட்டு, தன்னம்பிக்கைக்கு ஒரு மாபிளை உருவாக்கி வைத்துள்ளது டாடா ஸ்டீல்.

பல்லாண்டுகளாக நாட்டின் ஒரே எஃகுத் தொழிற்சாலையாக இருந்த டாடா ஸ்டீல், தனக்குத் தேவைப்பட்ட துணையுறுப்புகளைத் தயாரித்தளிக்க வேறு நிறுவனங்கள் எதுவும் இல்லாதிருந்த காரணத்தால், உபரி உறுப்புகளைத் தானே தயாரித்துக் கொள்ளவேண்டிய நிலை ஏற்பட்டது.

இன்றும் டாடா ஸ்டீல் லேரி கார், புஷர் கார் முதல் பெல்லெட்டைஸிங் கில்ன், மட் கன் மற்றும் ராக்கிங் ஷியர் வரை பல திறப்பட்ட உறுப்புகளைத் தானே டிஸைன் செய்வதோடல்லாமல், தயாரிக்கவும் செய்கிறது.

இவ்வழியில், நம் நாட்டின் பொருளாதாரச் செழுமைக்கு உதவுவது என்று டாடா ஸ்டீல் அறுபத்தாறு ஆண்டுகளுக்கு முன் வகுத்துக் கொண்ட கோட்பாட்டை நிறைவேற்றும் பணியில் தொடர்ந்து செயலாற்றி வருகிறது.



**டாடா ஸ்டீல்**



# வெற்றி தலைக்கேறி விட்டதா என்ன அவருக்கு?

**ஃபரூக் எஞ்சினீயர் புன்னகை புரிகிறார்**

"நான் எதையும் தலைக்கேற விடுவதில்லை. ஆம். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமைத் தவிர வேறு எதையும் நான் தலைக்கேற விடுவதில்லை. ப்ரில்க்ரீம் என்னுடைய தலைமுடியை ஆரோக்கியமாக, நன்கு படிந்த நிலையில் வைத்திருக்கிறது. எப்படியிருக்க நான் விரும்புகிறேனோ அதுபோலவேதான்."

ப்ரில்க்ரீமில் இருக்கும் புரதம் மயிர்க்கால்களுக்கு வலுவூட்டி, தலைமுடிக்கு நல்ல ஊட்டம் அளிக்கிறது. ப்ரில்க்ரீமினால் கலையாத முடியுடன் மிடுக்காக நீங்கள் நாள் முழுவதும் விளங்கலாம். தவிர பிசுக்குத்தன்மையோ, ஒட்டிக்கொள்ளும் தன்மையோ அதற்குக் கிடையாது. அது முடியலங்காரத்திற்கோர் நவீன வழி.

ஃபரூக் மாதிரியே நீங்களும் புத்திசாலித்தனமானதைச் செய்யுங்கள். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமை உபயோகியுங்கள்.







புரதம் நிறைந்த

**ப்ரில்க்ரீம்** அழகான முடிக்கு ஆரோக்கியமான வழி.

BF-3191-TAM-2

# ராஜாஜி சிறப்பிதழ்

பிரமாதீச, கார்த்திகை 24 டிசம்பர் 9, '73

## பொருளடக்கம்




| கல்கி - சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |




# கல்கி

"கல்கி"யில் வெளி வரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்ப வங்களும் கற் பனையே

# நவ யுக மிர்ராபோ ராணி

நீங்களும் மிர்ராபோ ராணியாகத் திகழ வேண்டுமா? உங்களுக்காகவே மிர்ராபோ ::புல் வாயில் புடவைகள். 2 120 x 2/120. வாஷ் அன் வேர்.

இதர தயாரிப்புகள் :

ஸ்டேலாங்கர்,
ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங்குகள்,
எலகன்ஸா சூட்டிங், லவ்லின் ஷர்ட்டிங்,
சில்வர்லைன், சில்வர்கிங் வேஷ்டிகள்,
மல், காடா.

**தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்**

மார்க்கெட் செய்பவர்கள் :
வெங்கடேஷ் வஸ்திராலயா



கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 33 - இதழ் 19

# ராஜாஜி ஜயந்தி

ராஜாஜி மண்ணுலகில் உதித்த நன்னாள் டிசம்பர் 8-ந் தேதி. இது வரையில் தொண்ணூறாவது ஜயந்தி, தொண்ணூற்று ஒன்றாவது ஜயந்தி என்றெல்லாம் காலக் கணக்கிட்டுக் கொண்டாடினோம். காலன் வசப்படும் சரீரம் இன்றில்லை. ஆனால் அதில் குடிகொண்டிருந்த தத்துவம் சத்தியமாக, நித்தியமாக நிலைநிற்கிறது. அதற்கு வயதுக் கணக்கு ஏதும் வகுக்காமல் இவ்வருடம் ஜயந்தி கொண்டாடுவோம். ராம நவமியும், கிருஷ்ணாஷ்டமியும் கொண்டாடும் போது வயதுக் கணக்கா பார்க்கிறோம்? காலனை வென்று, சாவைச் சாகடித்து, அமுதமாகி, ராமபிரானுடனும் கண்ண பெருமானுடனும் சேர்ந்துவிட்ட அண்ணலுக்குத் தத்துவ ஜயந்தி விழா எடுப்போம்.

ஜயந்தி தினத்தன்று தூய்மையும் பிரேமையும் ஒருருவமாகி அமர்ந்திருக்கும் அண்ணலை நேரில் கண்டு, பொன்னடி பணிந்து, அந்த அரவிந்தக் கர மலர்களின் அழுத்தமான ஸ்பரிசத்தைச் சிரசில் பெற்று ஆசிகொண்ட பாக்கிய சாலிகள், இந்த டிசம்பர் 8-ந் தேதியன்று ஏதோ ஒரு சூனிய உணர்வு கொள்ளவே செய்வர்.

ஆனால் சூனியத்தை ஒருபோதும் அநுமதிக்காத பூரணர் நம் ராஜாஜி என்பதை நினைவில் கொண்டு தொய்ந்த மனத்தைத் தட்டி எழுப்பிக் கொள்வோம். அவர் விட்டுச் சென்ற சுதந்திரப் பணியை வீறு கொண்டு ஆற்றுவதே அவருக்கு நாம் அளிக்கும் ஜயந்தி அஞ்சலி என்று தெளிவு கொள்வோம். அவரது உடலம் மறைந்ததை எண்ணித் துயரம் கொள்ளாமல், அதில் இலகிய உள்ளத்தின் உத்தமப் பாங்குகளை நினைந்து நெஞ்சு நனைவோம்.

மகாபுருஷர்கள் மரித்ததாக எண்ணுவது நம் மரபுக்கே ஒவ்வாத ஒன்று. ராமனும், கண்ணனும், ஆதிசங்கரரும், ராமாநுஜரும் தோன்றிய திருநாட்களையே களிப்புடன் கொண்டாடுகிறோம். எதுவரை நம்முடைய அன்பும் நன்றியும் மறையவில்லையோ அதுவரை மகாபுருஷர்களும் இருந்து கொண்டேயிருக்கிறார்கள். ஒவ்வோராண்டும் இந்த நன்றி உணர்வுக்கு, அன்பு உணர்ச்சிக்கு ஜயந்தி கொண்டாடுகிறோம். இன்னும் பல ஜயந்திகள் இப்படியே வரட்டும் என்று வேண்டுகிறோம். இன்னும் பல ஜயந்திகள் ராஜாஜிக்கு வரட்டும். இது வரை வந்த ஜயந்திகள் அவருடையவையாக இருந்தன. இனிவரும் ஜயந்திகள் நம்முடையவை; அவை நம்முடைய மேம்பாட்டுக்கு விழாவாகும்.

எனவே இந்த டிசம்பர் 8-ந் தேதி 'ராஜாஜி வாழ்க' என்று சொல்லும் போது நம்மையே வாழ்த்திக்கொள்கிறோம். இந்தத் திருநாளில், அவர் இறுதிக் காலத்தில் வாழ்ந்த சாலைக்குப் பெயர் தந்த நவுரோஜி குறித்து அமர கவி பாடியதையே சிறிது மாற்றி இறைவனுக்குப் பிரார்த்தனை செலுத்துவோம்:

ஒன்பது பத்திருந்த அவன்
இனிப் பல்லாண்டு இருந்தேமை
இனிது காக்க!
பண்பல்ல நமக்கிழைப்போர்
அறிவு திருந்துக!
எமது பரதநாட்டுப்
பெண் பல்லார் வயிற்றினுமே
ராஜாஜி போல் புதல்வர்
பிறந்து வாழ்க!

தாத்தா கொடுத்த தடியையும்
கேடயத்தையும் சும்மா பூஜை
பண்ணிக் கிட்டிருந்தா
போதாது; எடுத்துப்
பயன் படுத்த
வேணும்.

பர்மிட்-லைசென்ஸ்
தேசிய மயம்
பணவீக்கம், விலைவாசி உயர்வு
லஞ்ச-ஊழல்
பஞ்சம்-பற்றாக்குறை
பாரத மக்கள்

இந்திரா காங்கிரஸ்
சோவியத் கம்யூனிஸம்

அட! செயற்கைச்
சந்திரனைத் தயாரிக்க
இந்தியாவுக்கு ருஷ்யா
உதவலாம்னு
பார்த்தா
நீங்களே
முந்திக்கிட்
-டீங்களே!

## முதல்வரின் கண்ணீர்!









## கழுதை தேய்ந்து...



# உங்கள் குடும்பத்திற்கு
# ஏற்றது
# மிகச்சிறந்ததே!




DC.G.49 TM

பூரண பல்
பராமரிப்பிற்கு
**கால்கேட் டூத் பிரஷ்**
உபயோகியுங்கள்.
ஒவ்வொருவரின் தேவைக்கேற்றவாறு
அமைய—15 ரகங்கள்.

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள் !

கால்கேட் 10க்கு 7-பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி—கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

# தமிழ் நாட்டிலே... தீரன்

## சிவானந்த தபோவனம்

மதுரையிலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரை செல்லுகின்ற தேசிய நெடுஞ்சாலையில் திருப்பரங்குன்றம் மலையைப் பின்னணியாகக் கொண்ட அழகிய நிலப்பகுதியில் ஏரி ஒன்றின் எழிற்கரையில் சிவானந்த தபோவனம் அமைந்திருக்கிறது. 1967ம் ஆண்டு பெரிய நிலப்பகுதியில் ஒரு சிறிய குடிலுடன் தொடங்கப்பட்ட இந்தத் தபோவனம் இப்போது பக்கா கட்டிடத்துடனும், அழகிய தோட்டம் பூங்காக்களுடன் பசுமைச் சூழல் பெற்றும் அழகுற விளங்குகிறது. இந்தச் சிறிய தபோவனத்தில் ஆன்மீகச் சிறப்பு நிகழ்ச்சிகளும், திருக்குறள், கீதை வகுப்புக்களும் அவ்வப்போது நடைபெறுகின்றன. ஆன்மீகப் பெரியார்களும், ஞானிகளும் அடிக்கடி இங்கு விஜயம் செய்கிறார்கள். தபோவனத்தின் இத்தகைய பணிகளால் அக்கம்பக்கத்துக் கிராமத்துமக்களும், மாணவர்களும், இளைஞர்களும் பெரும் பயன் அடைந்து வருகின்றனர். தபோவனத்தைச் சேர்ந்த சிவானந்தா அச்சகத்தின் மூலம் 'சமயஜோதி' என்னும் ஆங்கிலத் தமிழ் மாத இதழ் வேறு வெளிவருகிறது. திவ்ய ஜீவன சங்கக் கிளையும், சிவானந்த நிலையம் - பிரசார இயக்கமும் தபோவனத்துக்குத் துணையமைப்புக்களாக இயங்குகின்றன. இவ்வளவு சிறப்பும் உள்ள தபோவனத்தில் எல்லா நாட்டினருக்கும் பயன்படவல்ல சர்வதேசப் பிரார்த்தனைக் கூடம் ஒன்றை நிறுவும் புனித முயற்சி இப்போது தொடங்கப்பட்டுள்ளது. இந்த முயற்சிக்கு மொத்தம் 2 லட்சம் ரூபாய் ஆகுமென்று திட்டமிடப்பட்டுள்ளது. இதற்குச் செய்யப்படும் நிதி உதவிகளுக்கு வருமான வரி விலக்கும் பெறப்பட்டுள்ளது. நிதி உதவி செய்கிறவர்கள், **காரியதரிசி, சிவானந்த தபோவனம், 6, சென்ட்ரல் மார்க்கெட் தெரு, மதுரை - 1** என்ற முகவரிக்குக் கிராஸ் செய்யப்பட்ட செக் அனுப்புமாறு கோரப்படுகிறார்கள்.

பல நாட்டு யாத்திரிகர்களும், பக்தர்களும், சுற்றுலாக் குழுவினரும் நிறைய விஜயம் செய்கிற கோவில் நகரமாகிய மதுரைக்குச் சிவானந்த தபோவனத்தின் திட்டமாகிய இந்தச் 'சர்வதேசப் பிரார்த்தனைக் கூடம்' மிக மிக அவசியமானதாகும்.

## யார் குற்றம்?

சட்டசபையில் 27–11–73 அன்று தமிழக முதல்வர் யாவரும் அறியும்படி ஒரு கடிதத்தைப் படித்திருக்கிறார். முன்பு தி.மு.க. உறுப்பினராக இருந்து தற்போது அ.தி.மு.க. ஆகியுள்ள சவுந்தரபாண்டியன் என்பவர் தம்முடைய கார் நிதிக்குப் பணம் தரும்படி கோரி ஒரு பிரமுகருக்கு எழுதிய கடிதமே அது. அந்த உறுப்பினர் தம்முடைய கார் நிதிக்குப் பணம் கேட்டு 22–12–68ல் திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த ஒருவருக்கு அந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறார்.

28–12–68ல் அ.தி.மு.க. பிரியவில்லை. தி.மு.க. ஒரு கட்சியாகவே இருந்தது. அதற்குப் பின் வந்த 71 தேர்தலிலும் அதே உறுப்பினர் எம். எல். ஏ. ஆக நிற்கத் தி.மு.க. டிக்கெட் பெற்றிருக்கிறார். இது எதைக் காட்டுகிறது? கார் நிதிக்குப் பணம் கேட்டவர், தி.மு.க.வில் உள்ளவரை அது ஊழலாக வழியில்லை. அவர் தி.மு.க.வைவிட்டு விலகிவிட்டால் அது ஊழலாகும். அந்த ஊழலுக்குப் பிறகும் நான்கு வருடங்களுக்கு மேல் அவர் தி.மு.க.வில் இருந்திருக்கிறாரே. அப்

---

### ராஜாஜி சிந்தனை

ஆராய்ச்சி என்பது வைக்கோற் போரில் ஊசியைத் தேடுவது போன்ற ஒரு விளையாட்டாகும். விஞ்ஞானிகள் தங்கள் காலத்தை வீணாக்கிக் கொண்டு இருப்பதாகவும், ஏராளமான பணத்தை விரயம் செய்து கொண்டு இருப்பதாகவும் தோன்றலாம். பயனற்ற வேலையைப் போல் தோன்றும் ஒன்றில் பலர் ஈடுபட்டால்தான் யாராவது ஒருவரால் ஊசியைத் தேடிக் கண்டுபிடிக்க முடியும். வேண்டுமென்றே பொழுதை வீணாகக் கழிப்பவர்கள் கூடாதுதான். அவர்களைப் புறக்கணிக்கத்தான் வேண்டும். ஆனால் விஞ்ஞானிகள் அப்படியல்ல. கால விரயம் செய்வது போல் அவர்கள் காணப்படுவது இயல்பு. உண்மையைக் கண்டறியும் முயற்சி நடந்துகொண்டேயிருக்க வேண்டும். இந்தியாவும் அதில் பங்கு கொண்டு பெருமையடைய வேண்டும். இந்தியாவிலுள்ள விஞ்ஞானிகள் உறுதியுடன் பாடுபட முன்வந்தார்களேயானால், அவர்கள் இந்தியாவின் அந்தஸ்தையே உயர்த்திவிட முடியும். இதர துறையில் ஏற்படும் குறைகள் தோல்விகளையெல்லாம் இது ஈடு செய்துவிடக்கூடியதாக இருக்கும். சர்வ தேச கௌரவம் பெற விஞ்ஞான ஆராய்ச்சி போன்று பயனுள்ள துறை வேறு எதுவும் கிடையாது. நம்முடைய சோதனைச் சாலைகள்தான் நமது மிகச் சிறந்த தாதுவராலயங்களாகும்.

போதே அவர் மேல் ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை என்று மக்களுக்கு நினைக்கத் தோன்றும் என்பதுகூட முதல்வருக்குப் புரியவில்லையே ? தி.மு.க.வில் இருந்தவரை ஒருவர் செய்த லஞ்ச ஊழல்கள் பாதுகாக்கப்படும் என மக்கள் நினைக்க இடம் கொடுப்பது சரியா ? இது ஒருபுறமிருக்க மேற்படி கடிதமே தாம் எழுதியது இல்லை என்று திரு சவுந்தரபாண்டியன் கூறியிருப்பதாகவும் தெரிகிறது.

## கோயிலுக்கு 'சிமெண்ட்' இல்லை !

மத்திய அரசின் தொல்பொருள் இலாகா மேற்பார்வையில் இருக்கும் தஞ்சைப் பிருகதீசுவரர் கோயில் கோபுரத்தையும் அதைச் சார்ந்த பகுதிகளையும் புதுப்பிக்கும் வேலை நடைபெற்று வருகிறது. தொல்பொருள் ஆராய்ச்சித் துறை இத்திருப்பணியைச் செய்வதற்கான நிதி உதவியையும் மத்திய அரசே வழங்கியிருக்கிறது. தஞ்சைப் பெரிய கோயிலைப் போலவே தாராசுரம், கங்கைகொண்ட சோழபுரம் கோயில்களின் கோபுரங்களைப் புதுப்பிப்பதற்கும் மத்திய அரசு நிதி வழங்கியிருக்கிறது.

ஆனால் முக்கால் பகுதி வேலை முடிந்துள்ள தஞ்சைக் கோபுரத் திருப்பணிக்கு வேண்டிய சிமெண்ட்டைத் தர இயலாதென்று மாநில அரசு அறிவித்துவிட்டதாகத் தெரிகிறது. வேலைகள் அரைகுறையாக உள்ள நிலையில் மாநில அரசு இப்படி மறுத்திருப்பது மத்திய தொல்பொருள் இலாகாவுக்கு வருத்தத்தை அளித்திருப்பதோடு வேலைகளைப் பாதியில் நிறுத்தும்படி ஆகிவிட்டது.

மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவதுபோல் 'கோயிலுக்குள்ளே ராஜராஜன் சிலைக்கு இடம் தர மறுத்த மத்திய அரசுக்கு சிமெண்ட் தர மறுப்பது மாநில அரசின் உரிமை அல்லவா?' என்கிறார் ஒரு தி.மு.க. அனுதாபி. மத்திய அரசு மேல் கோபமானால் அதற்குக் கோயில் கோபுரம் என்ன பாவம் செய்ததோ ?

## ஜனநாயகத்தில் கேட்கக் கூடாத கேள்வி

“நாங்கள் ராஜிநாமா செய்தால் எங்களுடைய பதவிகள் போய்விடுமே என்று எங்களுக்குச் சிறிதுகூட வருத்தமோ, கவலையோ கிடையாது. நாங்கள் பதவி விலகிவிட்டால் அந்த இடத்தில் உட்காரத் தகுந்த வேறு ஆள் தமிழ்நாட்டில் இல்லையே என்ற கவலையால் தான் நாங்கள் ராஜிநாமா செய்ய மறுக்கிறோம். நாங்கள் விட்டுச் செல்லும் இடத்தில் அமர உங்களுக்கு (மாணவர்களுக்கு) வேண்டியவர்கள் வேறு யாரும் இல்லையே? நாங்கள் தான் உங்களுடைய ரத்தத்தோடு ரத்தமாகக் கலந்தவர்கள் என்பதால்தானே பதவியில் இருக்கிறோம் ?'' என்று தம்மை ராஜிநாமா செய்யக் கோருகிற மாணவர்களைப் பார்த்துக் கேட்கிறார் கருணாநிதி. 'தி.மு.க. அரசு பதவி விலகினால் பதவி ஏற்க வேறு ஆள் இல்லையே?' என்று மக்களோ, மாணவர்களோ கேட்டால் அதில் தி.மு.க. பெருமைப்படலாம். மக்களும் மாணவர்களும் அப்படிக் கேட்காத போது திரு கருணாநிதி மட்டும் அப்படிக் கேட்பது ஜனநாயகத்தில் பொருந்தாத கேள்வி, மட்டுமில்லை, அபத்தமான கேள்வியுமாகும். மாணவ சமூகம் ஒன்று திரண்டு தி. மு. க.வை வெறுக்கும்போது, ''நாங்கள் தானே உங்கள் ரத்தத்தின் ரத்தம், சதையின் சதை'' என்று டயலாக் அடித்து முதலைக் கண்ணீர் வடிப்பது சிரிப்புக்கு இடமான விஷயமாகும்.

## ராயப்பா வழக்கு

தலைமை நீதிமன்றத்தில் ராயப்பா வழக்கு 'தள்ளுபடி' ஆகிவிட்டாலும் அந்தத் தீர்ப்பில் தெரிவிக்கப்பட்டுள்ள சில கருத்துக்கள் சிந்தனைக்கு உரியவை. தலைமை நீதிமன்ற உயர் நீதிபதிகள் மூன்று பேர் அரசாங்கத்தின் போக்கைப் பற்றித் தெரிவித்திருக்கும் சந்தேகம், கூவம் திட்டத்தைப் பற்றிய தவறுகள் தொடர்பாக விசாரிக்க அரசு எந்த உத்தரவும் இடவில்லை என்று சுட்டிக் காட்டியிருப்பது ஆகியவை அரசாங்கத்தின் மீது கூறப்பட்ட கண்டனங்களே எனக் கொள்ளலாம். ஆனால் முதல்வரோ இந்த நிலைமையிலும்கூட, ''மற்றவர்கள் என்ன சொன்னாலும் சொல்லட்டும்—நான் போனால் ஆளத் தகுதி உள்ள வேறு யார் வரப் போகிறார்கள்?'' என்று கேட்கிற பாணியில் பேசி வருகிறார். தமது அரசைப் புகழும் வாய்ப்பைக்கூட மற்றவர்களிடம் விட அவர் தயாராயில்லை. ஏனெனில், புகழ்வதற்கு யாரும் மீதியில்லை என்பது அவருக்கு நன்கு தெரியும்.

"

பேகிங் பவுடர்

# உபயோகித்து, மென்மையாக சுவைபடத் தயாரிக்கப்பட்ட கேக்குகளை என் தேநீர் விருந்துகளில் அனைவருமே விரும்புகின்றனர்"



என்கிறார் திருமதி சுலோசனு ராவ்,
'ஸ்ரீ நிவாஸ்', 95, மர்ராட்பள்ளி, சிகந்தராபாத், ஆந்திர பிரதேஷ்.



கார்ன் ப்ராடக்ட்ஸ்
தேர்ந்தெடுத்த
பரிசு – பெற்ற
பக்குவ முறை

## முட்டை கலவாத சாக்கலேட் கேக்

தயாரிக்க உதவுவது
ரெக்ஸ்
பேகிங் பவுடர்




கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றை சுவைபட அதி மென்மையாகத் தயாரிக்க மிகவும் உதவுகிறது, ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப்பட்டிருப்பதால், பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ் பேகிங் பவுடர்.

**பக்குவ முறை:**

2 கோப்பை மைதா
3 தேக்கரண்டி (தலைதட்டிய அளவு) ரெக்ஸ் பேகிங் பவுடர்.
1 கோப்பை சர்க்கரை
½ கோப்பை வெண்ணெ
1 கோப்பை பால்
4 மேசைக்கரண்டி (தலைதட்டிய அளவு) கோக்கோ.
½ தேக்கரண்டி உப்பு.
1 தேக்கரண்டி வனில்லா எஸ்ஸென்ஸ்.
½ கோப்பை துருவிய தேங்காய்.
½ கோப்பை பொடியாக நறுக்கிய அக்ரோட்டு.

1. மைதா, உப்பு மற்றும் ரெக்ஸ் பேகிங் பவுடரை ஒன்றாகச் சேர்த்து சலித்து எடுக்கவும். வெண்ணெயையும் சர்க்கரையையும் விழுதுபோல் ஆக்கவும். கோக்கோவை சூடான சிறிது பாலுடன் கலந்து; விழுதாக்கிய வெண்ணெ-சர்க்கரையுடன் சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
2. துருவிய தேங்காயை ஒரு தேக்கரண்டி நெய்யில் பொன்னிறமாகும் வரை வறுத்து எடுக்கவும். தயாரிக்கப்பட்டுள்ள மைதா, பேகிங் பவுடர், வெண்ணெ முதலிய கலவையுடன் தேங்காயை சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
3. அத்துடன் ½ கோப்பை நறுக்கிய அக்ரோட்டையும் வனில்லா எஸ்ஸென்ஸையும் சேர்க்கவும். நன்றாகக் கலக்கவும். அதை நெய் தடவிய சிறு அச்சுகளில் ஊற்றவும். மிஞ்சியுள்ள அக்ரோட்டால் அதை அலங்கரிக்கவும். அடுப்பில் வைத்து 12-15 நிமிடங்கள் வரை வாட்டவும்.

OBM—7049 TM

உங்கள் சமையல் உன்னதமாக இருக்க
உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ,
(இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ்,
எச். ஸோமானி மார்க், பம்பாய் 400001

# காமாக்ஷியின் கருணை (1)

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்

பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் முறையே பராசக்தியின் ரஜோ குணம், சத்துவ குணம், தமோ குணம் இவற்றில் தோன்றிப் படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய மூத்தொழில்களைச் செய்கின்றனர். ஜீவர்களான நமக்கும் இந்த மூன்று குணங்களும் இருக்கின்றன. நாமும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் மூன்று அவஸ்தை (நிலை)களில் செய்கிறோம்.

தூங்குகிறபோது சொப்பனம் உண்டாகிறதே — அப்போது நாம் சிருஷ்டித் தொழிலைச் செய்கிறோம். கனவில் எத்தனை எத்தனையோ இடங்களையும், ஜனங்களையும் படைத்து விடுகிறோம். அம்பாள் அவளுடைய லீலைக்கு ஒரு பெரிய திருஷ்டாந்தமாகவே சொப்பனத்தை உண்டாக்கியிருக்கிறாள் என்று தோன்றுகிறது. மனிதன் வேலை செய்வதற்காக விழித்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். வேலை செய்து களைத்தபோது தூங்க வேண்டியதுதான். ஆகையால் ஜாக்ரத் (விழிப்பு), ஸுஷுப்தி (தூக்கம்) என்ற இந்த இரண்டு அவஸ்தைகள் (நிலைகள்) போதாதா? ஸ்வப்னம் (கனவு) என்கிற மூன்றாவது அவஸ்தை எதற்காக இருக்க வேண்டும்? யோசித்துப் பார்த்தால் பராசக்தி பரம கருணையினாலேயே சொப்பனாவஸ்தையை ஒரு பெரிய உதாரணமாக நமக்குத் தந்திருக்கிறாள் என்று தெரிகிறது. "லோகத்தில் வேறு வேறாகக் காண்கிற சமஸ்த ஜீவராசிகளும் ஒரு பராசக்தியின் கற்பனைதான்; வாஸ்தவத்தில் அவளைத் தவிர வேறொன்றும் இல்லை" என்று ஞானிகள் சொல்லுகிறார்கள். இதை எப்படி நம்புவது? 'இத்தனை ஜீவராசிகளும் பிரத்யட்சமாகக் காணப்படுகிறார்களே, காரியங்களைச் செய்கிறார்களே, இவர்களை எப்படிக் கற்பனை என்று சொல்வது?' என்று தோன்றுகிறது. இந்தச் சந்தேகத்தைப் போக்கவே விழிப்பு, தூக்கம் இரண்டு மட்டுமே போதாது என்று சொப்பனாவஸ்தையை ஒவ்வொரு ஜீவனுக்கும் அம்பாள் தந்திருக்கிறாள். பராசக்தி ஒருத்தியின் கற்பனையில் நாம் அனைவரும் உண்டானது போல், நம் ஒருத்தரின் கற்பனையிலேயே கனவில் பல ஊர்களை, ஜனங்களை, நிகழ்ச்சிகளை உண்டாக்கி விடுகிறோம். **கனவு காண்கிறபோது** இதெல்லாம் கற்பனை என்று தெரிகிறதோ? இல்லை. சத்தியமாகவே தோன்றுகிறது. கனவில் அழுகிறோம், சிரிக்கிறோம், என்னென்னவோ செய்கிறோம். ஆனால் ஜாக்ரத் (விழிப்பு) நிலைக்கு வந்தவுடன் என்ன ஆகிறது? அத்தனை காட்சியும், ஊர்களும், ஜனங்களும், சம்பவங்களும் வெறும் கற்பிதமே என்று தெரிகிறது. ஆனால் இந்தக் கற்பனைக்கு ஆதாரமாக ஒருத்தன் இருந்தானே, அந்த ஜீவன் மட்டும் சொப்பனாவஸ்தையிலும் இருந்தான், இப்போதும் இருக்கிறான். இப்படியே உலகமும் பராசக்தியின் கற்பனையின்றி வேறில்லை; அவள் ஒருத்தியே எக்காலமும் சத்தியமாக நிற்பவள் என்று தெரிகிறது. கனவு காண்கிறபோது அது கனவு என்று தெரியாதது போல், இந்த உலக வாழ்க்கையில் நாம் மாட்டிக்கொண்டிருக்கிற வரையில் இந்த வாழ்வு மாயமே என்பதும் தெரியாமல் இருக்கிறது.

சொப்பனத்தை ஆத்ம சோதனை செய்து கொள்வதற்கு ஒரு பரீட்சையாகவும் அம்பாள் வைத்திருக்கிறாள். உள் மனத்தில் அமுக்கி வைத்த எண்ணங்களும், நம்முடைய பூர்வ சம்ஸ்காரங்களால் உள்ளுக்குள்ளே தடிப்பேறிப் போயிருக்கிற வாசனைகளுமே சொப்பனத்தில் ஓரளவுக்கு வெளியாகின்றன. உள்ளுக்குள்ளே நாம் எப்படி இருக்கிறோம், எத்தனை தூரம் பரிசுத்தமாயிருக்கிறோம் என்பது நமக்கே தெரியவில்லை. சாது ஜனங்களோடு கோவிலுக்குப் போனால் அப்போது மனசுக்கு ரொம்பவும் சாந்தமாக இருக்கிறது; நாம் மிகவும் சுத்தமாகி விட்டோம் போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டு விடுகிறோம். உடனேயே இந்திரியங்களைத் தூண்டுகிற சினிமா, இல்லாவிட்டால் நாவலைப் படிக்க நேர்ந்தால் அதிலும் சந்தோஷம் ஏற்படுகிறது. 'அடடா, கடைசியில் நாம் இவ்வளவுதானா?' என்று துக்கம் உண்டாகிறது. வாஸ்தவமாகவே நம் பக்குவத்தின் நிலை என்ன என்று உரைத்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளவே அம்பாள் சொப்பனத்தை ஓர் உரைகல்லாகத் தந்திருக்கிறாள். கனவில் நாம் காமாதி அநுபவங்களில் மகிழ்கிறோமா, அல்லது காமாக்ஷியின் தரிசனம் கிடைத்தாற்போல் சொப்பனம் வருகிறதா என்று பார்த்தால் நம் அந்தரங்கம் நமக்கே தெரியும். பூஜை, தியானம், ஜபம் என்று வெளிப்பட நாம் அமர்க்களம் பண்ணலாம். ஆனாலும் ஸ்வப்பனத்தில் காமாக்ஷியைத் தரிசிப்பதாக வந்தால்தான் உண்மையாகவே பக்குவமானதாக அர்த்தம். நம் குறை நிறைகளை அறியப் பரீட்சையாகக் கனவை வைத்திருக்கிறாள். குறையிருக்கிறதே என்று புலம்ப வேண்டியதில்லை. ஆனால் நமக்கு உள்ள குறையை உணர்ந்தாலே நிறைவை நோக்கிப் போகலாம். "அம்மா! நான் இன்னமும் இப்படித்தான் இருக்கிறேனா? என்னை மேலும் கைதூக்கிவிடு. உன்னை நிஜமாகப் பக்தி செய்ய அநுக்கிரகம் பண்ணு" என்று அவளையே நம்பிக்கையோடு வேண்டிக் கொள்ள வேண்டும். நம் பக்குவக் குறைவை உணர்ந்து, நம்மைத் திருத்திக் கொள்ளவே கருணையோடு சொப்பனாவஸ்தையை வைத்திருக்கிறாள்.

**(இவ்விஷயம் அடுத்த இதழிலும் தொடரும்)**

# குறைந்த முதலீடு—நிறைந்த மூலதனம்!



சுந்தரம் பைனான்ஸ் லேலண்ட், பிரிமியர், டாடா டிரக்குகள், பஸ்கள், அம்பாஸடர், பிரிமியர், ஸ்டாண்டர்ட் கேஜல் கார்கள் முதலியவைகளை வாங்க பண உதவி அளிக்கிறது.

சுந்தரம் பைனான்ஸ் உங்களுக்கு கீழ்க்கண்ட வகையில் உதவுகிறது: ☐ உங்கள் பழைய பஸ் அல்லது லாரியின் மேல் பண உதவி அளிக்கிறது. ☐ நீங்கள் முதலில் கட்டவேண்டிய தவணைத் தொகை பஸ் அல்லது லாரியின் விலையில் 25 சதவிகிதம் தான். ☐ குறைவான தவணைக்கட்டணம். ☐ எளிய இன்ஷ்யூரன்ஸ் தவணைச்சலுகைகள் ☐ சுலபமாக 36மாதங்களில் திருப்பிச் செலுத்தக்கூடிய சலுகை. மிக நேர்மையான, எளிய முறையில் சுலபமான நிபந்தனைகளின் பேரில், சுந்தரம் பைனான்ஸ் பண உதவி அளிப்பதில் முதன்மையில் திகழ்கிறது. எனவே பெரும்பாலான வாடிக்கையாளர்கள் சுமார் இருபது ஆண்டுகளாக சுந்தரம் பைனான்ஸுடன் நீடித்த தொடர்பு கொண்டு இருப்பதில் வியப்பில்லை.

sf

சுந்தரம் பைனான்ஸ்—நம்பகமான சேவைக்கு

**சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்**
**37, மவுண்ட் ரோடு,**
**சென்னை 600006**

SAA/SF/1112

# சிவகாமியின் சபதம்

## முப்பத்தேழாம் அத்தியாயம்

## கண்ணபிரான்

மூன் அத்தியாயத்தில் கூறியபடி, இதயத்தில் பெரிய பாரத்துடனே மடத்தின் வாசற் பக்கம் வந்த ஆயனர், தம் உள்ள நிலையை வெளிக்குக் காட்டாமல் சமாளித்துக் கொண்டு, சிவகாமியைப் பார்த்து, ''குழந்தாய்! இப்பொழுதே நாம் ஊருக்குத் திரும்பி விடலாமல்லவா?'' என்று கேட்டார்.

''கமலியைப் பார்த்துவிட்டுக் காலையில் போகலாம் அப்பா!'' என்று சிவகாமி மறுமொழி சொல்லிக் கொண்டிருந்தபோதே கடகடவென்ற சத்தத்துடன் இரட்டைக் குதிரை பூட்டிய ரதம் ஒன்று அங்கே வந்து நின்றது. அதை ஓட்டி வந்த சாரதி ரதத்தின் முன் தட்டிலிருந்து குதித்து வந்து, மடத்தின் வாசலில் ஆயனரும் சிவகாமியும் நின்றுகொண்டிருந்த இடத்தை அடைந்தான். அவன் நல்ல திடகாத்திர தேகமுடையவன். பிராயம் இருபத்தைந்து இருக்கும்.

''ஐயா! இங்கே மாமல்லபுரத்திலிருந்து ஆயனச் சிற்பியாரும் அவருடைய மகள் சிவகாமியம்மையும் வந்திருக்கிறார்களாமே, நீங்கள் கண்டதுண்டோ?'' என்று அவன் கேட்டான்.



''ஓகோ! கண்ணபிரானா? எங்களை யார் என்று தெரியவில்லையா உனக்கு?'' என்றார் ஆயனர்.

''அதுதானே தெரியவில்லை? இந்தச் சப்பை மூக்கையும் இந்த அகலக் காதையும் எங்கே பார்த்திருக்கிறேன்? நினைவு வரவில்லையே?'' என்று கண்ண பிரான் தன் தலையில் ஒரு குட்டுக் குட்டிக்கொண்டு யோசித்தான்.

''என் அப்பனே! மண்டையை உடைத்துக் கொண்டு எங்கள் மேல் பழியைப் போடாதே! கமலி அப்புறம் எங்களை இலேசில் விடமாட்டாள். நீ தேடிவந்த ஆயனச் சிற்பியும் சிவகாமியும் நாங்கள்தான்'' என்றார் ஆயனர்.

''அடாடா! இதை முன்னாலேயே சொல்லி யிருக்கக் கூடாதா? எனக்கும் சந்தேகமாகத்தான் இருந்தது. ஆனால் கண்ணால் கண்டதும் பொய், காதால் கேட்பதும் பொய், தீர விசாரிப்பதே மெய் என்று கும்பகர்ணனுக்கு ஜாம்பவான் சொன்ன பிரகாரம்... இருக்கட்டும்; அப்படி யென்றால், நீங்கள்தான் ஆயனச் சிற்பியாரும், அவருடைய மகள் சிவகாமியுமாக்கும்? ஆனால், உங்களில் ஆயனச் சிற்பி யார்? அவருடைய மகள் யார்?'' என்று விகட கவியான அந்த ரத சாரதி கேட்டுவிட்டு, அந்தி மாலையின் மங்கிய வெளிச்சத்தில் அவ் விருவர் முகங்களையும் மாறி மாறி உற்றுப் பார்த்தான்.

சிவகாமி கலகலவென்று நகைத்து விட்டு, ''அண்ணா! நான்தான் சிவகாமி; இவர் என் அப்பா; நாம் நிற்பது பூலோகம்; மேலே இருப்பது ஆகாசம்; உங்கள் பெயர் கண்ணபிரான்; என் அக்கா கமலி. இப்போது எல்லாம் ஞாபகம் வந்ததா? அக்கா சௌக்கியமா? இன்று ராத்திரி உங்கள் வீட்டுக்கு வருவதாக எண்ணி யிருந்தோம்'' என்றாள்.



''ஓஹோ! அப்படியா? கும்பிடப் போன தெய்வம் விழுந்தடித்துக் கொண்டு குறுக்கே ஓடிவந்த கதையாக அல்லவா இருக்கிறது? நீங்கள் எங்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தீர்களா?''

''ஆமாம்; வரலாமா, கூடாதா?''

''ஒருவிதமாக யோசித்தால், வரலாம்; இன்னொரு விதமாக யோசித்தால் வரக்கூடாது.''

''அப்பா! நாம் ஊருக்கே போகலாம். புறப்படுங்கள்!'' என்று கோபக் குரலில் சிவகாமி கூறினாள்.

''அம்மா! தாயே! அப்படிச் சொல்லக்கூடாது. கட்டாயம் வரவேண்டும். நான் இன்றைக்கு வீட்டை விட்டுக் கிளம்பியபோது கமலி என்ன சொன்னாள் தெரியுமா? 'இதோ பார்! இன்றைக்கு நாவுக்கரசர் மடாலயத்துக்கு ஆயனச் சிற்பியார் வருகிறாராம். அவருடன் என்னுடைய தோழி சிவகாமியும் வந்தாலும் வருவாள். இரண்டு பேரையும் அழைத்துக் கொண்டுதான் இராத்திரி நீ வீட்டுக்குத் திரும்பி வர வேண்டும்' என்றாள். நான் என்ன சொன்னேன் தெரியுமா? 'அவர்கள் பெரிய மனுஷாள் கமலி! நம்மைப் போன்ற ஏழைகள் வீட்டுக்கு வருவார்களா? வந்தால்தான் திரும்பிப் போவார்களா?' என்றேன். அதற்குக் கமலி, 'நான் சாகக் கிடக்கிறேன் என்று சொல்லி அழைத்து வா!' என்றாள்....''

''அடாடா! கமலிக்கு ஏதாவது உடம்பு அசௌக்கியமா என்ன?'' என்று ஆயனர் கவலையுடன் கேட்டார்.

''ஆம், ஐயா! ஒரு வருஷமாகக் கமலி அவளுடைய தோழியைப் பார்க்காமல் கவலைப்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிராணனை விட்டுக் கொண்டிருக்கிறாள். முக்கால் பிராணன் ஏற்கனவே போய் விட்டது. மீதியும் போவதற்குள் நீங்கள் வந்தால் நல்லது.''

''அப்படியானால் உடனே கிளம்பலாம். அதற்குள்ளே இங்கே ஜனக் கூட்டம் கூடிவிட்டது'' என்றாள் சிவகாமி.

உண்மையிலேயே அங்கே கூட்டம் கூடிவிட்டது. நகரத்தின் அந்த நெருக்கடியான பகுதியில் ஆயனரும் சிவகாமியும் அரண்மனை ரத சாரதியுடன் பேசிக் கொண்டிருக்கும் காட்சி ஜனக் கூட்டத்தைக் கவர்ந்து இழுத்ததில் ஆச்சரியம் என்ன?

ஆயனரையும் சிவகாமியையும் கண்ணபிரான் தான் கொண்டு வந்திருந்த ரதத்தில் ஏறிக் கொள்ளும்படி செய்தான். காஞ்சி மாநகரின் விசாலமான தேரோடும் வீதிகளில் இரண்டு குதிரை பூட்டிய அந்த அழகிய அரண்





மனை ரதம் பல்லவ சாம்ராஜ்யத்தின் சிறந்த ரத சாரதியினால் ஓட்டப்பட்டு விரைந்து சென்றது.

ரதம் போய்க் கொண்டிருக்கையில் சிவகாமி, "அண்ணா! உங்கள் வீட்டுக்கு வருகிறோம் என்று நான் சொன்னதற்கு, 'இன்னொரு விதத்தில் யோசித்தால் வரக் கூடாது' என்று சொன்னீர்களே அது என்ன?" என்று கேட்டாள்.

"தங்கச்சி! மடத்திலேயிருந்து குமார சக்கரவர்த்தியை அழைத்துப் போனே னல்லவா? அரண்மனை வாசலில் அவர் இறங்கியதும் என்னைப் பார்த்து, 'கண்ணா! ரதத்தை ஓட்டிக் கொண்டு மடத்துக்குப் போ! அங்கே ஆயனரும் அவர் மகளும் இருப்பார்கள். அவர்களை ரதத்தில் ஏற்றிக் கொண்டு போய், மாமல்லபுரத்தில் விட்டு விட்டு வா! அவர்கள் வேண்டாம் என்று சொன்னாலும் கேட்காதே!' என்று கட்டளையிட்டார். குமார சக்கரவர்த்தி அவ்விதம் கட்டளையிட்டிருக்கும்போது நம்முடைய வீட்டுக்கு அழைத்துப் போகலாமா என்று யோசித்தேன்" என்றான் கண்ண பிரான்.

"சுற்றி வளைத்துப் பீடிகை போடாமல் உங்களால் ஒன்றும் சொல்ல முடியாதோ?" என்று சிவகாமி கேட்டாள்.

"முடியாது, தங்கச்சி, முடியாது! அதற்குக் காரணமும் உண்டு. முன்னொரு காலத்தில் நான் சின்னக் குழந்தையா யிருந்தபோது...."

"நிறுத்துங்கள். நான் அதைக் கேட்க வில்லை. அவசரமாகக் குமார சக்கர வர்த்தி மடத்திலிருந்து போனாரே, ஏதாவது விசேஷமான செய்தி உண்டோ? என்று கேட்டேன்."

"மதுரையிலிருந்து தூதர்கள் வந்திருக்கிறார்கள்."

மதுரையிலிருந்து தூதர்கள் என்றதும் சிவகாமிக்குத் தான் முன்னம் கேள்விப்பட்ட திருமணத் தூது விஷயம் ஞாபகம் வந்தது.

எனவே, "தூதர்கள் என்ன செய்தி கொண்டு வந்தார்கள்?" என்று கவலை தொனித்த குரலில் கேட்டாள்.

"அந்த மாதிரி இராஜாங்க விஷயங்களையெல்லாம் நான் கவனிப்பதில்லை, தங்கச்சி!" என்றான் கண்ணபிரான்.

அதைக் கேட்ட ஆயனர் "ரொம்ப நல்ல காரியம், தம்பி! அரண்மனைச் சேவகத்தில் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களைக் காதிலேயே போட்டுக் கொள்ளக்கூடாது" என்றார்.

அப்போது ரதம் தெற்கு ராஜ வீதியில் அரண்மனையின் முன் வாசலைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தது.

வீதியின் ஒரு பக்கம் முழுவதும் வியாபித்திருந்த அரண்மனையின் வெளி மதிலையும், முன்வாசற் கோபுரத்தையும், அதைக் காவல் புரிந்த வீரர்களையும், உள்ளே தெரிந்த நெடிய பெரிய தாவள்யமான சுவர்களையும், படிப்படியாகப் பின்னால் உயர்ந்து கொண்டு போன உப்பரிகை மாடங்களையும் சிவகாமி பார்த்தாள். தன்னையும் தன்னுடைய இதயத்தைக் கவர்ந்த குமாரரையும் பிரித்துக் கொண்டு இத்தனை மதில் சுவர்களும் மாட கூடங்களும் தடையாக நிற்கின்றன என்பதை எண்ணி ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

# கமலி

காஞ்சி மாநகரத்தின் சக்கரவர்த்தியின் பிரதான அரண்மனைக்குப் பின்புறத்தில் விஸ்தாரமான பூந்தோட்டம் இருந்தது.

பூந்தோட்டத்தின் பின்புற மதிற் சுவரையொட்டிச் சில சிறு கட்டிடங்கள் இருந்தன. அவற்றில் சில குதிரை லாயங்கள்; சில ரதங்களை நிறுத்தும்

# ஃப்யூராடான் உபயோகித்தால் அதிக நெல் விளைச்சல்

**டாடா ஃபைஸன் ராலிஸ் வழங்கும் புதிய ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள் நெற்பயிரைத் தாக்கும் பூச்சிகளைக் கொல்லுகின்றன. இவை பயிர் முழுவதும் பரவி செயலாற்றுவதோடு, அதிக பச்சையான நெல்லைத் தருகின்றன. மற்ற பூச்சிக் கொல்லிகள் தருவதை விட ஹெக்டேருக்கு 3 மெட்ரிக் டன்னுக்கும் அதிகமாக விளைச்சல் தருகின்றன.**

உலகெங்குமுள்ள நெற்பயிர் விளையும் பிரதேசங்களில் மிகச் சிறந்த பூச்சிக் கொல்லி என்று போற்றப்படுகின்றன, ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள். இவை பயிர் முழுவதும் பரவும் நச்சியல்பு கொண்டவை. இவற்றை நிலத்திலும் செல் வயலிலுள்ள நீரிலும் போட்டால், வேர்கள் மூலம் பயிர்கள் அவற்றை உறிஞ்சி, பயிர் முழுவதும் பரப்புகின்றன. இதனால் இந்தப் பயிரைக் கடித்து மெல்லும், துளைக்கும் மற்றும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகள் கட்டுப்படுத்தப்படுகின்றன.

உங்கள் நெற்பயிருக்கு சிக்கனமான புதிய முறை, அதாவது விதைகளை/சாற்றுக்களைத் தோய்த்து எடுக்கும் முறைபற்றி உங்கள் வியாபாரியைக் கேளுங்கள். அதை ஒரு முறை கையாண்டு பாருங்கள். வியப்பூட்டும் பலன்களைக் கண்டு நீங்கள் அதிசயிப்பீர்கள்.

வியாபார விவரங்களுக்கு எழுதுக:

**ராலிஸ் இந்தியா லிமிடெட்**

அக்ரோ கெமிக்கல்ஸ் & பெஸ்டிசைட்ஸ் டிவிஷன்,
21, ரேவலின் ஸ்ட்ரீட்,
பம்பாய் 1.

மற்ற இடங்கள்: சென்னை, கல்கத்தா, லக்னோ —

**TATA FISON RALLIS**

**விசேஷ சிறப்பம்சங்கள்:**

ஃப்யூராடான் 3ஜீ குருணைகள் வேறாகத் தூவப்படும் பூச்சிக் கொல்லிகளை விடச் சிறந்தவை; மிகப் பயனுள்ளவை.

- நெற்பயிரைத் தாக்கும் தண்டுதுளைப்பான், தத்துப் பூச்சி, ஆனைக்கொம்பன், அசிக்கும் பேன் ஆகிய பெரும்பாலான பூச்சிகளைக் கட்டுப்படுத்துகின்றன.
- விசேஷ கருவிகளின் உதவியின்றியே கையால் இந்த மருந்தை எளிதில் பத்திரமாகப் போடலாம்.
- கடித்து மெல்லும் பூச்சிகளையும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளையும் கட்டுப்படுத்துகின்றன.
- பூச்சிகள் விரைவில் கொல்லப்படுவதால் பயிர் முழுதும் உடனடியாகப் பரவி விடுகின்றன.
- இக் குருணைகளை மழை அடித்துச்செல்ல முடியாது. தெளிப்பு மருந்துகளைவிட நீண்ட காலப் பாதுகாப்புத் தருகின்றன.
- தானிய மணியில் மருந்து தங்கிவிட ஏற்றதாக்காமல் செய்யாது.
- இவை பயிரை அழிக்கும் பூச்சிகளை மட்டும் பாதிக்கும்; பயிருக்கு சாதகமான பூச்சிகளுக்குத் தீங்கு செய்யாது.






டாடா ஃபைஸன்
தயாரிப்பு

fmc furadan®
IS A REGISTERED TRADEMARK OF FMC CORPORATION

PATENT NUMBER 97302 OF FMC CORPORATION

**அதிக நெல் விளைச்சல் பெற...ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள்**

OBM-0275 TAM

கொட்டடிகள்; மற்றவை ரத சாரதிகளும், தோட்டக்காரர்களும் வசித்த வீடுகள்.

அந்த வீடுகளில் ஒன்றுக்கு முன்னால், கண்ணபிரான் ஓட்டிக் கொண்டு வந்த ரதம் நின்றது. ரதத்தின் சத்தத்தைக் கேட்டு, வீட்டுக்குள்ளே யிருந்து ஒரு பெண் குதூகலமாகக் குதித்துக் கொண்டு ஓடி வந்தாள்.

''கமலி! யாரை அழைத்து வந்திருக்கிறேன், பார்!'' என்று சொல்லிக் கொண்டே கண்ணபிரான் ரதத்திலிருந்து குதித்தான்.

அதே சமயத்தில் ரதத்திலிருந்து சிவகாமி இறங்குவதைப் பார்த்த கமலி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று சிவகாமியை ஆர்வத்துடன் கட்டிக் கொண்டாள்.

அப்போது வீட்டுக்குள்ளே யிருந்து ஒரு பெரியவர் வந்தார்.

''அப்பா! யார் வந்திருக்கிறார் பாருங்கள்!'' என்றான் கண்ணபிரான். அந்தப் பெரியவர் உற்றுப் பார்த்து விட்டு, ''வாருங்கள், ஐயா!'' என்று சொல்லிக் கொண்டு ஆயனரின் அருகில் சென்றார்.

பெரியவரும் ஆயனரும் பேசிக் கொண்டே வீட்டுத் திண்ணையில் அமர்ந்தார்கள். கமலியும் சிவகாமியும் உள்ளே போனார்கள்.

சிவகாமியும் கமலியும் குழந்தைப் பிராயத்திலிருந்து தோழிகள். ஆயனர் காஞ்சியில் இருந்த காலத்தில் அவருடைய வீட்டுக்கு அடுத்த வீட்டில் கமலியின் பெற்றோர்கள் வசித்தார்கள். சிவகாமி குழந்தையா யிருந்தபோதே அவளைக் காட்டிலும் ஒன்றரை வயது மூத்தவளான கமலி, சிவகாமியைத் தன் மடியில் வைத்துக் கொண்டு, ''தங்கச்சி!'' என்று அருமையாக அழைத்துச் சீராட்டுவாள்.

குழந்தை சிவகாமியும், ''அக்கா! அக்கா!'' என்று மழலைச் சொல்லில் குழறுவாள்.

இவ்வாறு ஆரம்பித்த அக்குழந்தைகளின் சிநேகம் நாளுக்கு நாள் வளர்ந்து முதிர்ந்து வந்தது. ஆயனர் காட்டுக்குள்ளே சென்று வீடு கட்டிக் கொண்டு வசிக்கத் தொடங்கியபிறகு கமலி அடிக்கடி அங்கு வந்து மாதக் கணக்கில் தங்கியிருப்பாள்.

சிவகாமி ஆட்டம் பயிலும்போதெல்லாம் கமலி அவள் எதிரில் இருந்து இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பாள். அவளுடைய ஆட்டத் திறமையைப் பாராட்டுவாள். ''என் தங்கச்சிக்கு இணை ஈரேழு பதினாலு உலகத்திலும் கிடையாது!'' என்பாள். ஆயனருக்கு அடுத்தபடியாகச் சிவகாமிக்கு ஆட்டக் கலையில் ஊக்கம் அளித்தவள் கமலி என்றுதான் சொல்ல வேண்டும்.

---

## தாராளமும் சிக்கனமும்



ராஜாஜி குதூகலத்துடன் அனுபவிக்கும் சில காரியங்களில் வேஷ்டி துவைப்பதும் ஒன்று. அதிலும் அவர் குற்றாலத்தில் தங்கியிருக்க வேண்டும். பளிங்கு போன்ற அருவி நீரில் துணியை நனைத்துத் தூய்மையான பாறைக்கல்லில் துவைப்பதில் ராஜாஜிக்கு அளவில்லாத குதூகலம்.

-'ராஜாஜி பொல்லாதவர்' என்ற கட்டுரையில் 'கல்கி'

இப்படி அருவி நீரில் ஆனந்தமாகக் குளித்துப் பழக்கப்பட்ட ராஜாஜி சிக்கனமாகத் தண்ணீரை ஆளும் கலையிலேயும் வல்லவர். ராஜாஜியின் இந்த ஆற்றலையும் அமரர் கல்கியே 'மூன்று மாதக் கடுங்காவல்' என்ற நூலில் விவரித்துள்ளார்.

திருச்சி சிறையில் பெரிய வசதிக் குறைவு என்று சொல்லக் கூடியதாக இருந்தது தண்ணீர்ப் பஞ்சம். ஆனால் இந்தத் தண்ணீர்ப் பஞ்சம் காரணமாக ராஜாஜியிடம் ஓர் அரிய பாடத்தைக் கற்றுக்கொள்ள முடிந்தது. ஒரே ஒரு பக்கட் தண்ணீரைக் கொண்டு எப்படிச் சுத்தமாக ஸ்நானம் செய்து துணி தோய்த்து முடிக்கலாமென்பதை ராஜாஜி தம் உதாரண ரூபத்தில் கற்றுக் கொடுத்தார்.

தகவல்: வி. ச. வாசுதேவன்



கமலியின் தகப்பனார் காஞ்சியில் பெயர் பெற்ற குதிரை வியாபாரி. அரேபியா முதலான வெளி தேசங்களிலிருந்து அவர் குதிரைகள் தருவிப்பார். மாமல்லபுரத்துத் துறைமுகத்தில் கப்பலில் வந்து குதிரைகள் இறங்கும். அவற்றைக் காஞ்சிக்குக் கொண்டு வருவார். முதலில் அரண்மனைக் குதிரை லாயத்தின் தலைவரும் பல்லவ சைனியத்தின் குதிரைப் படைத் தலைவரும் வந்து புதிதாகத் தருவிக்கப்பட்ட குதிரைகளைப் பார்ப்பார்கள். அவர்கள் தங்களுக்கு வேண்டியவற்றை வாங்கிக் கொண்டது போக மற்றக் குதிரைகளைத்தான் பொது ஜனங்களுக்கு விற்கலாம்.

இதன் காரணமாக அரண்மனைக் குதிரை லாயத்தின் தலைவர் அடிக்கடி கமலியின் தந்தையைச் சந்திப்பதற்காக அவருடைய வீட்டுக்கு வருவதுண்டு. சில சமயம் அவருடன் அவருடைய மகனும் வருவான். அந்த வாலிபனின் பெயர்தான் கண்ணபிரான்.



தந்தைமார்கள் இருவரும் குதிரைப் பரிவர்த்தனை விஷயமாகப் பேசிக் கொண்டிருக்கையில் மகனுக்கும் மகளுக்கும் இடையே இருதயப் பரிவர்த்தனை நடந்து கொண்டிருந்தது.

இரு குடும்பத்தாருக்கும் விஷயம் தெரிந்தபோது, கண்ணபிரானுக்கும் கமலிக்கும் கல்யாணம் செய்து வைத்தார்கள்.

இது நடந்து வருஷம் ஒன்றரை ஆயிற்று. இந்த ஒன்றரை வருஷமும் சிவகாமியும் கமலியும் சந்திக்கவில்லை என்றாலும், அவர்கள் ஒருவரையொருவர் நினைக்காத நாள் கிடையாது.

இரவு உணவு அருந்திய பின்னர் ஆயனரும் அரண்மனையின் அசுவபாலரும் வாசல் திண்ணையில் காற்றோட்டமாகப் படுத்துக் கொண்டு யுத்த நிலைமையைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள்.

வீட்டுக்குள்ளே அரண்மனைப் பூந்தோட்டத்தை அடுத்திருந்த அறையில் சிவகாமியும் கமலியும் படுத்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் யுத்தத்தைப் பற்றிப் பேசவில்லை. கமலியின் இல்வாழ்க்கைதான் அவர்கள் சம்பாஷணையில் முக்கிய விஷயமாக இருந்தது. இடையிடையே 'கலீர்' 'கலீர்' என்று அவர்கள் குதூகலமாகச் சிரிக்கும் சத்தம் கேட்டது.

இரவு ஒன்றரை ஜாமத்துக்கு மேல் ஆனபோது வாசல் திண்ணையிலிருந்து ஆயனர், ''அம்மா! சிவகாமி! உதயத்துக்கு முன்னால் நாம் புறப்பட வேண்டும். பேசியது போதும்; தூங்கு!'' என்றார்.

கமலியும் சிவகாமியும் உடனே கண்களை மூடிக்கொண்டு தூங்குவதற்குப் பிரயத்தனம் செய்தார்கள்.

வெகு நேரம் ஆனதும், சிவகாமி தூங்கிவிட்டதாக எண்ணிக் கொண்டு கமலி சத்தம் செய்யாமல் எழுந்திருந்து, அந்த அறையின் ஒரு பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு அடுத்த அறைக்குள் சென்றாள்.

சிவகாமி கண்களை மூடிக் கொண்டிருந்தாளே தவிர உண்மையில் தூங்கவில்லை. அவளுடைய உள்ளத்தில் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் அலை மேல் அலை எறிந்து தோன்றிக் கொண்டிருந்தன.

கமலிக்குக் கண்ணபிரான்மேல் காதல் உண்டான நாளிலிருந்து அவள் தன்னுடைய அந்தரங்கத்தை வெல்


CHANDRIKA
AYURVEDIC
SOAP

# பொன்மலர் மேனிக்கு மென்மணம் சந்தனம்!

முழுமையான தூய மைசூர் சந்தனம்,
வெளிநாட்டு வாசனை திரவியங்கள்,
பலவித இயற்கை மூலிகைகள் இவை-
யனைத்தையும் ஒருங்கே கொண்டு,
பிரத்தியேகமான 'மைக்ரோ:பைன்'
முறையிலே தயாரிக்கப்படுவது
**கோகுல் ஸான்டால் டாய்லெட் பவுடர்.**
கோடையைக் குளுமையாக்க, காலையும்,
மாலையும், எப்பொழுதும், புத்துணர்ச்சி-
யுடன் திகழ, உங்கள் மேனி முழுமையும்
**கோகுல் ஸான்டால் டாய்லெட்**
பவுடரைத் தூவுங்கள். சந்தன
மண உலகிலே சஞ்சரியுங்கள்!

# கோகுல்



## ஸான்டால் டாய்லெட் பவுடர்

**டி.எஸ்.ஆர் & கம்பெனி,**
**மதராஸ்**
பிரத்தியேக தயாரிப்பு

*கோகுல் நறுமணம் சூழட்டும்*
*உங்கள் வாழ்வு கமழட்டும்!*

**டி.எஸ்.ஆர் & கம்பெனி, மதராஸ்**
ராமாவரம், மதராஸ் 600089



லாம் சிவகாமியிடம் அடிக்கடி சொல்வதுண்டு.

ஆரம்பத்திலிருந்தே கமலியின் காதல் ஆனந்த மயமாக இருந்தது. எவ்வித துக்கமோ வேதனையோ அவள்



மனத்தில் ஏற்பட்டதில்லை. அந்த நாட்களில் அவளுடைய பேச்சு ஒரே குதூகலமாகவும் எக்களிப்பாகவுமே இருந்து வந்தது.

கல்யாணத்துக்குப் பிறகு அந்தத் தம்பதியின் இல்வாழ்க்கையும் அவ்விதமே குதூகலமா யிருக்கிறதென்பதை இப்போது சிவகாமி தெரிந்து கொண்டாள்.

ஆனால், தன்னுடைய காதல் மட்டும் ஏன் இவ்வளவு வித்தியாசமாக இருக்க வேண்டும்? அதில் எத்தனை வேதனை? எத்தனை ஆத்திரம்? எத்தனை கோப தாபம்?

கமலியின் குதூகலமான காதலுக்கும், தன்னுடைய வேதனை மயமான காதலுக்கும் உள்ள வித்தியாசத்தை எண்ணிப் பார்க்கப் பார்க்கத் தனக்குத் தகுதியில்லாத இடத்தில் காதலைச் செலுத்தியதுதான் தன்னுடைய துன்பங்களுக்கெல்லாம் காரணம் என்று சிவகாமிக்குத் தோன்றியது.

அவரோ பெரிய சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்துக்கு உரியவர். நாமோ கல்லில் உளியினால் வேலை செய்யும் சிற்பியின் மகள். அவருடைய காதலுக்கு நாம் ஆசைப்படுவது பெரிய பிசகுதான். ஆனால், இந்தப் பிசகுக்குக் காரணம் யார்?

இந்த ஏழைச் சிற்பியின் மகளைத் தேடிக் கொண்டு அவர்தானே வந்தார்? ஒரு கவலையுமின்றிக் காட்டில் துள்ளி விளையாடும் மானைப் போல் குதூகலமாக ஆடிப் பாடிக் கொண்டிருந்த அபலைப் பெண்ணின் உள்ளத்தில் அவர்தானே ஆசைத் தீயை மூட்டினார்? ஆகா, அந்த ஆசையானது இப்போது இப்படிப் பெரு நெருப்பாய் மூண்டு விட்டதே? உடம்பையும் உள்ளத்தையும் இப்படித் தகிக்கின்றதே?

சற்று நேரம் புரண்டு புரண்டு பார்த்தும் தூக்கம் வராமற் போகவே, சிவகாமி படுக்கையை விட்டு எழுந்தாள். அந்த அறையின் பின்புறச் சுவரிலிருந்த பலகணியின் மாடத்தில் உட்கார்ந்தாள். அவள் எதிர்பார்த்தபடியே பலகணியின் வழியாகப் பங்குனி மாதத்து இளந்தென்றல் 'ஜிலு ஜிலு' வென்று வந்து கொண்டிருந்தது. அது சும்மா வரவில்லை. அரண்மனைப் பூந்தோட்டத்திலிருந்த சண்பக மரங்களில் நுழைந்தும், மல்லிகைச் செடிகளின் மீது தவழ்ந்தும், அந்த மலர்களின் இன்ப நறுமணத்தை அள்ளிக் கொண்டு வந்தது.

அவ்விதம் சண்பகமும் மல்லிகையும் கலந்து உண்டான சுகந்தமானது சிவகாமியின் உள்ளத்தில் ஏதோ தெளிவில்லாத பழைய ஞாபகங்களை உண்டாக்கிற்று. எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால், ஜன்ம ஜன்மாந்தரங்களில் இதே விதமான நறுமணத்தை அவள் நுகர்ந்தது போலவும், அந்தக் காலங்களிலும் இதே விதமான இன்ப வேதனை அவள் மனத்தில் குடிகொண்டிருந்தது போலவும் மங்கிய நினைவுகள் உண்டாயின. தனது அன்பைக் கவர்ந்து, உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஆருயிர்க் காதலன் தனக்கு வெகு சமீபத்தில் இருந்தும் அவனை அடைய முடியாதிருப்பது போலவும், இருவருக்கும் இடையில்



இன்னதென்று தெரியாத இடையூறுகள் மூளைத்துப் பெரிய கரிய நிழல் உருவங்கள் எடுத்து நிற்பது போலவும் மனத்தில் பிரமைகள் உண்டாயின.

(தொடரும்)

**மட்ட ரக விளக்குகள்: குறைந்த ஆயுள்**

# தொல்லையற்ற நல்லொளி தரும், மதிப்பின் சிகரமான விளக்குகள்: ஜிஇஸி ஆஸ்ரம்

அவை நீடித்த ஆயுள் வலிமையோடு தொல்லையற்ற உழைப்பைத் தருபவை
— ஏறுமாறான வோல்டேஜ் நிலைகளிலும் இயங்குதிறம் மாறாதவை.

* நீண்ட நெடுங்காலம் 'சிகரமான' ஒளி சிந்துபவை.

G.E.C. Osram

ஜிஇஸி ஆஸ்ரம் டியூப்லைட்டுகள், பல்புகள்.



உகந்த விலையிலே தகுந்த ஒளி தருபவை





லிண்டாஸ்-GEC/OTL 13-140 TH



# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 மார்ச், 17உ.**

**வெ**ள்ளிக் கிழமை : நைனுமலைக் கோஞர் இன்று காலை தூக்கிலிடப் பட்டார். பத்தொன்பது அல்லது இருபது வயது இளைஞன்.

என் விடுதலை வெகு சமீபமாக நெருங்கிவிட்டதால் இங்கு இருந்த மூன்று மாத காலமும் என்னுடைய வாழ்வில் அனுபவித்த இன்பகரமான சமயங்களில் ஒன்று என்று குறிப்பிட விரும்புகிறேன். சென்ற இருபது நாட்களை ஒத்துழையாமைக் கைதிகளின் பகுதிகளில் இடையூறின்றி இன்பமாகக் கழித்தேன். இந்த நான்கு அறைகளையும் ஒரே ஹாலாகச் செய்திருக்கிறார்கள். கல்லூரி ஹாஸ்டல் மாதிரியிருக்கிறது. சிறை என்ற ஞாபகமே வரவில்லை.

பிப்ரவரி முதல் வாரத்திலிருந்து சிறை உத்தியோகஸ்தர்கள் எப்போதும் எங்களிடம் மரியாதையாகவும் அன்பாகவும் நடந்து வருகிறார்கள். செய்யக்கூடிய வசதிகளெல்லாம் செய்கிறார்கள். சிறைத் தலைமை அதிகாரிகள் எல்லோரும் மேஜர் ஆண்டர்ஸனைப்போல் நடந்து கொண்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்! அவர் அன்பாகவும் மரியாதையாகவும் நடந்து கொள்கிறார். இந்த மாதிரி நடக்க வேண்டும் என்று யாரும் கூறவில்லை. அவராகவே அப்படி நடக்கிறார். ஒரு வேளை சில சமயங்களில் அவர் அதற்கு மாறாக நடப்பதாகத் தோன்றினாலும் அதற்குக் காரணம் மேலதிகாரியின் தலையீடாகவோ அல்லது சிறை விதிகளின் கடுமையாகவோதான் இருக்கும்.

ஜெயிலரும் பிரதம வார்டரும் ஆச்சரியப்படத்தக்க விதத்தில் மாறுதல் அடைந்திருக்கிறார்கள். இந்தச் சிறையிலுள்ள சகல உத்தியோகஸ்தர்கள் சம்பந்தமாகவும் என் மனத்தில் நல்லெண்ணமும் நன்றியுணர்ச்சியுமே உண்டாகியிருக்கின்றன. இவர்களில் யாரைப் பற்றியேனும் இந்தக் குறிப்புப் புஸ்தகத்தில் ஏதேனும் கடுமையாக எழுதியிருந்தால், அதெல்லாம் இப்போது மறைந்து போய்விட்டன. அவற்றுக்குப் பதிலாக நட்புணர்ச்சியே தோன்றியிருக்கிறது. ஆயினும் முன்னால் எழுதியதை அடிக்காமல் இருப்பதற்குக் காரணம் அவ்வப்போது தோன்றிய எண்ணங்களை அப்படி அப்படியே குறித்து வைக்க விரும்பியதேயாகும். இங்குள்ள உத்தியோகஸ்தர்களுக்குத் தங்கள் மனத்தை மாற்றிக் கொள்ளச் சந்தர்ப்பம் கொடாமல் அவர்களைப் பற்றிக் கடுமையாக எழுதியிருப்பதற்கு வருந்துகிறேன்.

இந்த இருபது நாட்களும் ஆந்திர தேசத்து ஒத்துழையாமைக்காரர்களில் சிறந்தவர்களுடன் பழகும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. அவர்கள் எத்தனையோ விதமான தியாகங்கள் செய்திருக்கிறார்கள். அவர்களுடன் இரவு பகலாய் வாழ்ந்ததால் அந்நியோன்யமாகப் பழகி அவர்களை மிக நெருக்கமாக, நன்றாக அறிந்து மகிழும் பாக்கியம் பெற்றேன்.



இன்று பிற்பகல் சிறைத் தலைமை அதிகாரியுடன் பேசிக் கொண்டிருந்தேன். அரசியல் கைதிகளை நடத்தும் விஷயத்தில் அவர் விருப்பம் போல் நடந்து கொள்ள அரசாங்கம் அனுமதிக்கவில்லை. அரசியல் கைதிகளிடம் அன்புடனும் அனுதாபத்துடனும் நடந்துகொள்ள வேண்டும் என்று கூறும் அதே சமயத்தில், சாதாரணக் கைதிகளுக்குரிய சிறை விதிகளையேதான் சத்தியாக்கிரகிகள் விஷயத்திலும் அனுஷ்டிக்க வேண்டும் என்று அரசாங்கம் கூறுமானால் அவர்கள் கூறும் அன்பும் அனுதாபமும் வெறும் அர்த்தமற்ற மொழிகள்தானே!

# ராஜாஜியுடன் ஆயிரம் நாட்கள்



கவர்னர் ஜெனரல் பதவியை எளிமையும் கம்பீரமும் கலந்த முறையில் ராஜாஜி வகித்ததை 'கல்கி' வர்ணித்த விதம்: ''அரியாசனத்தில் ஜனக மகாராஜா!''

ராஜாஜியைப் போன்ற மகான்களிடம் பணி புரியக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அதிலும் ராஜாஜியினிடமே பணி புரிய ஒருவருக்கு வாய்ப்புக் கிடைத்ததென்றால், அவரைப் போன்ற பெரிய அதிர்ஷ்டசாலி வேறு யார்? அத்தகைய அதிர்ஷ்டம் 1947–1948ம் ஆண்டுகளில் திரு பிமனேஷ் சாட்டர்ஜிக்கு அடித்தது. ராஜாஜி வங்கத்தில் கவர்னராகவும், தில்லியில் கவர்னர்-ஜெனரலாகவும் பதவி வகித்த காலத்தில் அவருக்கு மிலிட்டரி செக்ரடரியாகப் பணிபுரியும் அரிய வாய்ப்புக் கிடைத்தது. பிமனேஷ் சாட்டர்ஜி தொழில் முறையில் ஒரு டாக்டர். ராஜாஜி வங்க கவர்னராகப் பதவி ஏற்குமுன் கல்கத்தாவில் கவர்னராக இருந்த ஸர் ஃப்ரடரிக் பர்ரோஸுக்கு சஸ்திர சிகிச்சை வைத்தியராக இருந்தார். ராஜாஜி வங்க கவர்னராக நியமிக்கப்பட்டவுடன் திரு பிமனேஷ் சாட்டர்ஜியைத் தமக்கு மிலிட்டரி செக்ரட்டரியாக ஆக்கிக் கொண்டார்.

அவருக்கு ராஜாஜியிடம் பழகிப் பணியாற்றுவது மிக வியப்பும் மதிப்பும் விளைவிக்கும் அனுபவமாக இருந்தது. ராஜாஜி எந்த விஷயத்தையும் தமக்கே உரிய ஒரு தனிப் பாணியில் அணுகுவதைக் கண்டு மெய்சிலிர்த்தார். அவ்வுணர்ச்சிகளையும் சம்பவங்களையும் தம் நினைவிலிருத்தி யிருந்தார். அவற்றை இப்போது தொகுத்து ஓர் அருமையான நூலாக ''ராஜாஜியுடன் ஆயிரம் நாட்கள்'' என்ற தலைப்பில் வழங்குகிறார்.

பிரிட்டிஷார் மிகுந்த படாடோபமாகவும் தங்கள் அதிகாரத்தைக் காட்டிக் கொள்ளும் வகையிலும் வகித்த பெரும் பதவிகளை நம் ராஜாஜி எப்படி எளிமையும் கம்பீரமும் கலந்த முறையில் வகித்தார் என்பதை நூலைப் படிக்கும்போது உணர்ந்து நெஞ்சம் பூரிக்கிறோம். அப்பதவிகளுக்கு மேலும் சிறப்புத் தரும் வகையிலும் எவ்வளவோ நாட்கள் அப்பதவிகள் வகித்துப் பழக்கப்பட்டவர் போலவும் ராஜாஜி நடந்து கொண்டதை ஆசிரியர் வெகு அழகாக எடுத்துக் காட்டுகிறார்.

ராஜாஜி கவர்னராக நியமிக்கப்பட்டவுடன், வெள்ளைக்காரர் கவர்னர்களாக இருந்தபோது இருந்த பல ஏற்பாடுகள் புதிய சூழ்நிலையில் சுதந்திர பாரதத்தில் அவசியமில்லை என்று தீர்மானித்தார். பல செலவினங்களைக் குறைத்தார். கவர்னர் மாளிகை நிர்வாகத்தைச் சிக்கனப்படுத்தும்படி யோசனை கூறினார். ஆனால் பொய்ம்மையான சிக்கனம் வேண்டாம் என்றும் கூறினாராம். இந்தக் கருத்தைத் தெளிவுபடுத்த ''மலிவு என்று எண்ணி வாங்குவது பல சந்தர்ப்பங்களில் சிக்கன நடவடிக்கையாக இருப்பதில்லை'' என்று சொற்சிக்கனம் செய்து கூறினாராம். இதுதான் ராஜாஜி.

ராஜாஜி வங்கத்தில் கவர்னராக இருந்தபோது பிரதமர் நேரு விஜயம் செய்தார். அப்பொழுது இவ்விரு தலைவர்களும் பழகிக் கொண்ட விதம், அவர்களின் பரஸ்பர அன்பு, ஒருவரையொருவர் கிண்டல் செய்துகொண்ட முறை எல்லாம் உள்ளத்தைத் தொடுவனவாகும்.

வங்கத்தை விட்டு நேரு புறப்படுவதற்கு முன் அவரை ராஜாஜியுடனும், மற்ற மந்திரிகளுடனும் சேர்த்து ஒரு குரூப் போட்டோ எடுக்க ஏற்பாடாகி யிருந்தது. குறித்த நேரத்தில் ராஜாஜி, மந்திரிகள் எல்லோரும் வந்து விட்டார்கள். அவரவர்கள் இடத்தில் உட்கார்ந்து விட்டார்கள். பின்னர் வந்த நேரு எல்லோரும் தயாராகித் தமக்காகக் காத்துக் கொண்டிருக்கும் நிலையைப் பார்த்தவுடன் ராஜாஜியின் பக்கத்தில் தமக்காகப் போடப்பட்டிருந்த நாற்காலிக்கு விருவிருப்பாக நடந்து சென்று உட்கார்ந்தார். போட்டோகிராபர் இப்பொழுது பின்னால் நிற்பவர்களை 'இப்படி நில், அப்படி நில்' என்று ஒழுங்கு படுத்திக்கொண் டிருந்தார். இதைப் பார்த்த

நேரு. ''நம்மை என்ன செய்யச் சொல்லுகிறார்?'' என்றார் பொறுமை இழந்து.

''நம்மைச் சற்று நேரம் பொறுமையாக இருக்கச் சொல்கிறார் — மனச்சாட்சியின் உறுத்தலின்றி நம்மைச் சுடுவதற்கு'' என்று ராஜாஜி 'ஷூட்' என்ற வார்த்தையை வைத்துச் சிலேடை புரிந்தார். நேருஜி சிரித்தபடியே அதன் பின்னர் பரபரப்பான தமது இயல்பை அடக்கிக் கொண்டு அமைதியோடு இருந்திருப்பார் என்று கூறவும் வேண்டுமா?

பெரிய பதவிகளில் இருக்கும் பெரிய மனிதர்களுக்கு அந்தரங்கக் காரியதரிசியாகப் பணி புரிபவர்களுக்குப் பல தர்மசங்கடமான நிலைகள் ஏற்படுவதுண்டு. அத்தகைய நிலையில் பிமனேஷ் ஒருமுறை சிக்கிக் கொண்டார்.

அஸ்ஸாம் கவர்னராக இருந்த ஸர் அக்பர் ஹைதரி காலமாகி விட்டார் என்ற செய்தி இரவு இரண்டு மணிக்கு வந்தது. பிமனேஷ் விடியும்வரை பொறுத்திருந்து அதிகாலையில் ராஜாஜியின் படுக்கையறைக் கதவைத் தட்டினார். ராஜாஜி எழுந்து கதவைத் திறந்து, ''என்ன சமாசாரம்? வானம் இடிந்து விழுந்து விட்டதா என்ன?'' என்றார். பிமனேஷ் தாக்குண்டவராகச் சற்றுத் தயங்கினார். உடனே ராஜாஜி ''இன்னும் நான் தயாராக இல்லை. இருந்தாலும் உங்களுக்கு ஏதாகிலும் சொல்ல வேண்டியிருந்தால் சொல்லலாம்'' என்றாராம். இம்மொழிகள் ராணுவக் காரியதரிசிக்குச் சற்றுத் தைரியமளித்தன. சமாசாரத்தைச் சொன்னார்.

''நீ செய்தது ரொம்பச் சரி. இந்தச் சமாசாரம் கால தாமதமின்றி முதலில் எனக்குத் தெரிவிக்கப்பட வேண்டிய விஷயம் தான்'' என்றார், ராஜாஜி.

அந்தச் சமயத்தில் பிமனேஷின் உள்ளம் எவ்வளவு மகிழ்ந்திருக்கும் என்பதையும் ராஜாஜியிடம் அவருக்கு மதிப்பு எவ்வளவு உயர்ந்திருக்கும் என்பதையும் ஊகிக்கலாம்.

இந்த ஆயிரம் நாட்களில் பலப் பல பெரும் நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. மகாத்மா காந்தி அமரத்துவம் அடைந்தார்; பாரத தேசம் குடியரசு ஆயிற்று; ஹைதராபாத் சமஸ்தானத்தில் போலீஸ் நடவடிக்கை எடுக்க வேண்டியிருந்தது.

இவை போன்ற இன்னும் பல சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கட்டங்களில் ராஜாஜியின் பங்கு என்ன; சரித்திரத்தின் போக்கை அவர் எப்படி வகுத்துத் தந்தார் என்பன போன்ற கேள்விகளுக்கு இந்நாலில் விடை காண இயலாது. அது கட்டுரை ஆசிரியரின் நோக்கமும் அல்ல. ஆனால் ராஜாஜியின் குண இயல்புகளை வெளிப்படுத்தும் பல சம்பவங்களைப் பற்றி அறியலாம். அதோடு, ஆட்சிமொழி, ஜனநாயகம், குழந்தைப் பராமரிப்பு, மதுவிலக்கு, சைக்கிள் சவாரி, மேனாட்டுத் தூதுவர்களுடன் உரையாடல், அகதிகள் பிரச்னை — போன்ற பலப் பல விஷயங்களைக் குறித்து என்ன கருத்துக்களைக் கொண்டிருந்தார் என்பதையும் நூலைப் படிப்பவர்கள் அறியலாம். ஒவ்வோர் அம்சத்தையும் ராஜாஜி தமக்கே உரிய தனித்த நோக்கோடு அணுகிச் சிந்தனைக்குச் சொல் வடிவம் தரும் போது வானவில்லின் வர்ண ஜாலங்களைக் காண்பதுபோல் ஒரு புதுமைப் பொலிவை உணர்ந்து சிலிர்க்கிறோம்.

---

**Thousand days with Rajaji**

Author: Bimanesh Chatterjee; Publishers: Affiliated East West Press Private Limited: 9, Nizamuddin, New Delhi-110013 Price: Rs. 20.



''இரு பெரும் தலைவர்களும் பழகிக்கொண்ட விதம், அவர்களின் பரஸ்பர அன்பு, ஒருவரையொருவர் கிண்டல் செய்துகொண்ட முறை எல்லாம் உள்ளத்தைத் தொடுவனவாகும்.''



காந்திஜி நம்மிடையே இருந்தார் என்று பெருமைப்பட்டுக் கொண்டால் மட்டும் போதாது. நாம் என்ன செய்ய வேண்டும் என்று அவர் விரும்பினரோ அதைத்தான் நாம் செய்ய வேண்டும். உயிரோடிருப்பவர்கள் முகஸ்துதியினுல் திருப்தியடையக் கூடும். ஆனல் முகஸ் துதியாலும், வெறும் புகழ்ச்சியாலும் காந்திஜியின் ஆத்மாவைத் திருப்திப் படுத்த முடியாது. அவர் விரும்பியபடி நாம் நடந்து கொள்வது ஒன்றின் மூலமே நாம் அவரைத் திருப்திப்படுத்த முடியும்.



மனைவி, மக்கள், கணவன், குலத்தார், ஊரார், தேசத்தார் என்றெல்லாம் கருதிக் கவலைப்பட்டு, அன்பும், பணியும் செய்தால் அப் பொருள்களில் மறைந்து உள்ளூடு நிற்கும் மெய்ப் பொருளைக் காணும்படியான அறிவு உண்டாகும்.



உயிருள்ள மரத்தை விட அழகான பொருள் வேறு எதுவும் இந்த உலகத்தில் கிடையாது. குழந்தையின் மூக்கையும், வாயையும் மூடி மூச்சு விட முடியாமல் தடுப்பது போல் உயிருள்ள மரத்தின் இலைகளைப் போக்குவதும்பாவகரமான செய்கையாகும்.



நல்ல சிறுகதைக்கு அடையாளம் ஒன்றே. அதைப் படித்து முடிக்கும் போது நல்லவர்களுடைய மனத்தில் மகிழ்ச்சி தோன்றி உள்ளம் பூரிக்கும்.

கௌரவப் பட்டங்கள் குறித்துப் பலமுறை எனக்குச் சிரிக்கத் தோன்றியது உண்டு. எனக்கு நகைச்சுவை உணர்ச்சி இருப்பதன் காரணமாக, பிரமாதமான படிப்பு இல்லாத என்னைப் போன்றவர்களுக்குக் கௌரவப் பட்டங்கள் வழங்கப்படும் போது அது குறித்து என்னால் சிரிக்க முடிகிறது.



நமக்கென்று பாரதநாட்டில் மிகப் பெரிய முனிவர்களும், ஞானிகளும் தோன்றித் தங்களுடைய இதயங்களைக் கடைந்தெடுத்து அமுதத்தைத் தர நிற்கிறார்கள். அதை விட்டு விட்டுப் பயனற்ற பொருள்களை நாடி அலைந்து காலம் கழிக்கிறோம். தெய்வப் பிரசாதமாகிய முனிவர்களுடைய அறிவும் அருளும் பெற்றுக் கொண்டுபயனடைவோமாக.



நல்லவர்களுடைய உள்ளங்கள் வெகு சீக்கிரம் சுலபமாக ஒன்று கூடும். வெகு காலம் ஒரே இடத்தில் கூடிவாழ வேண்டியதில்லை. அநேக சந்தர்ப்பங்களில் ஒருவரோடு ஒருவர் கலந்து பழக வேண்டியதில்லை. இருவர் உள்ளங்களிலும் தானாக உதிக்கும் உணர்ச்சியே நட்பைத் திமர் என்று உண்டாக்கும்.



பத்திரிகைத் துறையை ஒரு கலையாகக் கருத வேண்டும்; தொழிலாகக் கருதக் கூடாது. பத்திரிகையாளர்கள் ஆலைத் தொழிலாளர்கள் போன்றவர்கள் அல்ல; ஓவியர்கள், கவிஞர்கள் போன்றவர்கள். பத்திரிகையாளர்களாகிய நீங்கள் ஒரு கட்டுரை எழுதும் போதோ, தலையங்கம் எழுதும் போதோ கலைப் பொருள் ஒன்றை உண்டாக்குகிறீர்கள்.



எல்லாச் சமயங்களும் பராசக்தியை நோக்கிச் செல்கின்றன. எல்லாப் பக்தர்களும் ஆண்டவனை அனுபவித்துப் பாடியும் போதித்தும் வந்திருக்கிறார்கள். தாமும் அடக்கத்துடன் பகவானுக்கு உள்ளத்தில் இடம் தந்து பக்தி செலுத்தி அவனை இதயத்தில் நிறுத்திக் கொள்வோமாக.

வாக்காளரிடையே ஒழுக்கக் குறைவு, மக்களிடையே கெட்ட குணம் ஆகியவற்றால்தான் ஜனநாயகத்துக்கு இடையூறு ஏற்படும். ஜனநாயக அரசாங்கத்தில் ஆட்சி பீடத்தில் இருப்பவர்களால் தீமை ஏற்படாது. ஜனங்களின் நடத்தையால்தான் தீமை ஏற்பட முடியும்.

தங்களுடைய பாதுகாப்புக்காக என்று சொல்லிக்கொண்டு அணு ஆயுதங்களை வல்லரசுகள் தயாரித்து அடுக்கலாம். இதற்கான விலையாக ஆரோக்கியக் குறைவையும் வியாதிகளையும் அவர்கள் ஏற்கவும் செய்யலாம். ஆனால் ருஷ்யாவும் அமெரிக்காவும் ஒன்றையொன்று நம்பவில்லை என்பதற்காக உலகின் ஏனைய பகுதிகள் விஷச் சூழலுக்கு ஆளாகி நலிவானேன்?

சுதந்திரக் கட்சியை ஓர் அரசியல் கட்சி என்பதைவிட ஓர் இயக்கமாகக் கருதுவதே பொருத்தம். பிரஜையின் சுதந்திரத்தைப் பாதுகாத்து அரசு அவனது பொருளாதாரத்தின் மீது முழு ஆதிக்கம் செலுத்துவதை எதிர்ப்பதுதான் இந்த இயக்கத்தின் அடிப்படை நோக்கம். சுதந்திரக் கட்சியில் உள்ளவர்கள் பதவிக்கு வர வேண்டும் என்று நினைப்பதைவிட மக்களுக்குத் தங்கள் சுதந்திரத்தைக் காத்துக் கொள்ளவும் பொருளாதாரத்தைப் பேணவும் கற்றுக் கொடுப்பதையே முக்கிய குறிக்கோளாகக் கொள்ள வேண்டும்.



# திருமணம்

இளைஞர் வாழ்வில் இன்ப வசந்தம் திருமணம்—மங்கல மனை மாட்சிக்கும், நன் மக்கட் பேற்றுக்கும் வழி வகுப்பது. அதனுல்தான் திருமணத்தை "ஆயிரங்காலத்துப் பயிர்" என அழைக்கின்றனர். இந்தக் காலத்தில் திருமணத்திற்கு ஏராளமான பணம் செலவாகிறது. உங்கள் செல்வ மகள் வளர்ந்து பெரியவளாகும்போது, அவள் திருமணத்திற்குத் தேவையான தொகை ஆகாயத்திலிருந்து 'பண மழை'யாகப் பொழியாது. நன்கு திட்டமிட்ட, நீண்ட காலச் சேமிப்பு மூலமே நீங்கள் அதற்கு வகை செய்ய இயலும். **எல்.ஐ.சியின் திருமண எண்டோமெண்ட் பாலிசித் திட்டம்** அதற்கு உகந்த சிறந்த திட்டமாகும்.



**ஆயுள் இன்சூரன்சு** போல
**ஆதரவு தருவது எதுவுமே இல்லை**

EP LIC-6-73

# எடை

ஷபீனா

இருப்பதோ இரண்டு புடவைகள்; அவற்றில் அந்தப் பாக்குக் கலர் சின்னாளப்பட்டிப் புடவை கொஞ்சம் சுமார். அதிகம் இழியாதது. நேற்றே அதற்குச் சோப்புப் போட்டுத் துவைத்துக் காய வைத்திருந்தாள் கமலி. அதை நன்கு மடித்துச் சுருக்கம் போவதற்காகப் பழைய டிரங்குப் பெட்டியின் அடியில் வைத்திருந்தாள்.

காலையில் இருட்டோடு எழுந்து குளித்துவிட்டு வந்தாள் கமலி. அவசரம் அவசரமாக நேற்று எப்படியோ சம்பாதித்து வைத்திருந்த ஆழாக்கு அரிசியை உலையின்மீது வைத்தாள். இன்று முழுதும் மூன்று ஜீவன்களுக்கு அது தான் ஆகாரம். கமலி, அவள் அம்மா, அப்பா மூவர்தான்.

''அப்பா உலையிலே அரிசியைக் களைந்து வைச்சிருக்கேன். அம்மா வந்தா தக்காளிக் குழம்பு வைக்கச் சொல்லு..... நான் போயிட்டு வரேன்'' — ஓடி ஓடி வேலை செய்தவாறு தகப்பனைப் பார்த்துக் கூறினாள் கமலி.

இருக்கிற 'ஒரே அறை' மாளிகையில் கதவு ஓரமாகப் பாயில் உட்கார்ந்திருந்த கமலியின் தகப்பனார் வேதாசலம் மகளைப் பார்த்துப் பெருமூச்செறிந்தார்.

''இது வயசுப் பொண்ணுக கல்யாணம் ஆகிக் குழந்தை குட்டிகளோடே சந்தோசமா இருக்கிறாங்க.... பாவம்! கமலி.... இங்கே தினப்படி சாப்பாட்டுக்குத் தாளம் போடுதே. கல்யாணம் எங்கேயிருந்து வரும்...? ஆண்டவனே! கமலி இன்னிக்குப் போற காரிய மாச்சும் பழமாகி வரட்டும். அது நாலு காசு கொண்டு வந்தாத்தான் இனிமே நாம பொழைக்கலாம்....'' — ஆதங்கமான எண்ணம் ஓடிற்று வேதாசலத்துக்கு.

அதற்குள் கமலி கிளம்பிவிட்டாள். ''நான் போயிட்டு வரேம்பா.... இன்னிக்குப் போற வேலையாவும் கிடைக்கட்டும்....'' என்றவாறு வாசலைக் கடந்தாள்.

கமலி போய்ப் பத்து நிமிஷங்களுக்கெல்லாம் வேதாசலத்தின் மனைவி பாக்கியம் மூக்கை முணுகியவாறு மார்க்கெட்டிலிருந்து உள்ளே நுழைந்தாள். அந்த மூக்கலுடனே பொரிந்து கொண்டே வந்தாள்:

''கடங்காரப் பசங்க... ஏன்தான் இப்படிப் பண்ணுறானுகளோ தெரியல்லே. இதைப் பாருங்க ..... வெறுஞ் சோத்தை எப்படிடா தின்றதுன்னு சொல்லி எப்படியோ பீருஞ்ச காசுக்குத் தக்காளி வாங்கிக் குழம்பு வைக்கலாம்னு போனா.... இதுதான் கால் கிலோவாம்..... மூணே பழந்தான் இருக்கு.... கேட்டா ஏடாகூடமாப் பேசறான்.....இப்படி எடையிலேயே லாபம் அடிக்கிறானுகளே....'' பேச்சைப் பாதியிலேயே நிறுத்திவிட்டுக் கணவனைப் பார்த்தாள். ''எங்க, கமலி போயிடுச்சா .....?''

''உம்!''—சுருக்கமாகப் பதில் அளித்தார் வேதாசலம். அவர் எண்ணம் மனைவியின் பேச்சைச் சுற்றியே வட்டமிட்டது. பாக்கியம் சொன்ன 'எடை'யை வைத்துத்தானே வேதாசலம் சம்பாதித்தார். எத்தனை பேர் இவள் கத்தின மாதிரி அவரிடம் கத்தியிருப்பார்கள். அத்தனை பேருக்கும் அடாவடி பதில் சொல்லி அனுப்பி விடுவாரே!

வேதாசலம் ரேஷன் கடையில் வேலை பார்த்து வந்தார். சர்க்கரை, ரவா, மைதா



இவைகளை எடை போட்டுக் கொடுக்கும் வேலை. வெகு லாகவமாக எடை போடுவார். வலது கைவிரல் நகத்தால் அழுத்திக் கொண்டே தட்டைச் சாய்த்துவிடுவார். அவ்வளவுதான். ஒரு கிலோ என்றால் 900 கிராம் தான் இருக்கும்.

ஒரு நாளைக்கு நூற்றுக்கணக்கான கிலோ சர்க்கரை, ரவா, மைதா... கேட்க வேண்டுமா ? சாயந்திரம் கடை கட்டும்போது மிச்சப்படும் சரக்குகளை ரேஷன் விலைக்குச் சற்று அதிகமாகவும், வெளி விலைக்குச் சற்றுக் குறைவாகவும் தள்ளிவிட்டு விடுவார். அவ்வளவுதான். ஒரு நாளைக்கு இருபது முப்பது தேறும். வழியில் சாராயக் கடை விஜயம்.

வீட்டுக்கு வரும்போது மனைவிக்கு ஒரு பந்து குண்டு மல்லிகை; கமலிக்குச் சேட்டுக் கடை மிட்டாய்; காராசேவு — என்று 'தாம் தூம்' செலவாகச் செய்வார். தினம் ராத்திரி செமர்த்தியான சாப்பாடு. வாழ்க்கை ஒரே வாண வேடிக்கையாக இருந்தது வேதாசலத்துக்கு.

திடீரென்று வேதாசலத்துக்குக் கண் பார்வை கோளாறுவிடவே வேலைக்குப் போக முடியவில்லை. வீட்டோடு இருக்கும்படி ஆகிவிட்டது. கூடவே தரித்திரம் அவரை அணைத்துக் கொண்டது. எத்தனையோ நாட்களாக — பலபேர் வயிற்றெரிச்சலுடன் — 'எடை'யில் அவர் சம்பாதித்த காசைக்கூட அவர் சேர்த்து வைக்கவில்லை. மனைவி பாக்கியம் நித்திய வியாதிக்காரி. இருந்ததும் ஒரே பெண். கமலி கல்யாண வயசுக்காரி. வருமானத்துக்கு வழி ? பெண்ணுக்குச் செல்லம் கொடுத்து வளர்த்துப் பள்ளிக்கூடத்துக்குப் போக விடாமல் செய்தது எத்தனை தப்பு என்பது வேதாசலத்துக்கு இப்போது தெரிந்தது. ஏதாவது படித்திருந்தால் வேலைக்குப் போகலாமே. குறைப் படிப்போடு நிறுத்திவிட்ட கமலி என்ன செய்வாள்?

தரித்திரத்தின் ஆட்சி ஓங்கவே, இருந்த ஒன்றிரண்டு நகைகள், பித்தளைப் பாத்திரங்கள் எல்லாம் போய்விட்டன. கமலியும் ஏதேதோ வேலைக்குப் போய் முயற்சி பண்ணினாள், நர்சரி ஸ்கூல் ஆயா அப்படி இப்படி என்று. ஒன்றும் கிடைக்கவில்லை.

'அத்தனை நாள் எடையில் குறைத்துச் சம்பாதித்த காசைச் சேர்த்து வைத்திருந்தால்...?' — ஏக்கப் பெருமூச்சொன்றை விட்டார் வேதாசலம்.

'இந்தப் பொண்ணு இன்னிக்குப் போயிருக்கிற வேலையாவது கிடைக்கட்டும்.... நம்ம தரித்திரம் விடியட்டும்' — என்று எண்ணிக் கொண்டார். இந்த வேலையும் கிடைக்கவில்லை என்றால் — அந்த எண்ணமே அவரை உலுக்கியது. அப்புறம் பட்டினிச் சாவுதான் !

சாயங்காலம் நாலு மணிக்குத் திரும்பி வந்தாள் கமலி. ஆளரவம் கேட்டவுடனே, ''ஏம்மா... கமலியா....?'' என்றார் வேதாசலம்.

''ஆமா...ப்பா!'' — கமலியின் பதிலில் இருந்த சோர்வு வேதாசலத்துக்கு இடியாக இருந்தது.

''என்னம்மா ஆச்சு.... பழமா ?''

கமலிக்கு அழுகையே வந்துவிட்டது. கேவிக் கொண்டே சொன்னாள். ''போப்பா! ஒரு வேலையும் கிடைக்கல்லே..... புதுசா 'பெண் போலீஸ்' வேலைக்கு ஆள் எடுக்கிறாங்கன்னு போனேனே, அங்கேயும் என் அதிர்ஷ்டம் வந்திடுச்சப்பா... என்னை எடுக்க முடியாதுன்னுட்டாங்க.....''

வேதாசலம் துணுக்குற்றவாறே கேட்டார்.

'' என்னம்மா, காரணம் ?''

''எல்லாம் சரியா இருந்திடுச்சப்பா.... என் 'எடை'தான் குறைச்சல்; போறுதுன்னுட்டாங்க.....''






## இரண்டாம் அத்தியாயம்

"இரண்டு நாட்கள் முன்பு உங்கள் அறையில் இது கசங்கிப் போய்க் கிடந்தது. நேற்று குப்பையில் கிடந்தது. எடுத்துப் பார்த்தேன். இது தவறான காரியம்தான் என்றாலும், உங்கள் சோகத்தைக் கண்டறிய இது உதவலாம் என்பதற்காக எடுத்துப் படித்தேன்" என்று கூறிக்கொண்டே சாந்தா மதுராம்பிகையிடம் அந்தக் கடிதத்தை நீட்டினாள்.

"இது கிடைத்துவிட்டதா? இரண்டு நாட்களாக இதைத்தான் தேடிக்கொண்டிருந்தேன். அன்று ஆத்திரத்தில் அதைக் கிழித்துப் போட்டு விட்டேன். பிறகு 'இது தேவைப்பட்டது. குப்பையெல்லாம் தேடினேன்.' நல்ல வேளை. சாந்தா..... இது எனக்கு ரொம்பவும் அவசியமான கடிதம்......" என்றவள் அதை வாங்கி, மிக பத்திரமாகப் பீரோவைத் திறந்து வைத்தாள்.

"இதெல்லாம் ஒரு காரணமாகத்தான் நான் சேகரிக்கிறேன்."

பீரோவின் கதவை மூடாமல் சாந்தாவைத் திரும்பிப் பார்த்த மதுராம்பிகை பீரோவிலிருந்து சிறிய கட்டு ஒன்றை எடுத்துக் காட்டினாள்.

பீரோவினுள் அந்தக் காகிதக் கட்டை வைத்து மூடிவிட்டு, "வா, சாப்பிடப் போகலாம்...." என்று சாந்தாவை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

சின்ன டைனிங் டேபிள் மேல் எல்லாம் எடுத்து வைக்கப்பட்டிருந்தன. இருவரும் உணவு அருந்த அமர்ந்தனர்.

* * *

"எல்லாவற்றையும் நான் அழித்து விட்டேன். நீதிமன்றத்தில் வழக்கு நடந்த இந்த வழக்குமன்ற தஸ்தாவேஜூம் தீர்ப்பும்தான் என்னிடமுள்ளவற்றில் நான் அழிக்காதவை; அழிக்க முடியாதவை. எப்படியோ இந்த ஆல்பம் மட்டும் தங்கிவிட்டது. பல வருஷங்கள் கழித்துத்தான் இது கண்ணில் பட்டது. அன்று இருந்த மன நிலை, அன்று இருந்த வேகம், அன்று இருந்த சீற்றம் எல்லாம் சமனப்பட்ட நிலையில் இது கண்ணில் பட்டபோது, இதை அழிக்க மனம் வரவில்லை. பத்திரப்படுத்த விரும்பவில்லை என்றாலும், அழித்துவிட எண்ணம் தோன்றவில்லை..... இதைப் பார்... எல்லாம் தெரியும்......"

தடிமனான ஆல்பம் ஒன்றைச் சாந்தாவிடம் கொடுத்தாள்.

ஏராளமான கோணங்களில் புகைப்படங்கள் பேசின. ஒரு சிறப்புமிக்க வரலாற்றினை விளக்கும் நூறுகணக்கள் ஒரு திரைப்படம் போல் நீண்டது.

" ஒரு குழந்தையைக் கையைப் பிடித்து அழைத்துப் போகிறீர்களே ! இது பூங்கா மாதிரி இருக்கிறதே !"

" ஆமாம். பூங்கா மாதிரியான பெரிய தோட்டத்தின் மத்தியில் உள்ள பங்களா அது. பின்னணியில் தெரியவில்லை?"

"தெரிகிறது."

" அரை நிக்கரும் ஜர்கினுமாக உங்கள் கையைப் பிடித்துக் கொண்டு வரும் இவன்?"

"என் மகன்."

"மகன் ?"

"ஆமாம்."

"புகழேணியில் இருக்கையில் இவரைக் கைப் பிடித்தேன். ஆனால், அவர் எண்ணங்களெல்லாம் ரொம்ப விரைவிலேயே வெளியே தெரியத் தொடங்கி விட்டன. அவருடைய சுய சொரூபம் தெரியும்போது நான் ஆறு மாத கர்ப்பிணி.

''அவர் அருகில் இல்லாமலே இவன் பிறந்தான். அப்பொழுது இவர் எனது சொத்தில் பாதியைக் கபளீகரம் செய்து கொண்டு போய்விட்டார். தனியே திருச்சியில் பங்களா, தனியே கார்... தனியே பாங்கியில் கணக்கு....

''இவை ரொம்ப நாட்கள் வரை எனக்குத் தெரியாது. காரணம், அவருடைய அந்தரங்கத்தை நான் ஒரு தடவைகூடச் சந்தேகித்ததில்லை. அவருடைய அன்பில் போலித்தனமில்லை என்று நான் வைத்திருந்த நம்பிக்கை...? அவர் நல்லவர் என்று நான் மனப்பூர்வமாக நம்பியது? அந்தரங்கமான எனது நண்பர் ஒருவர் வந்து சொன்னபோது கூட நான் நம்பவில்லை. அவர் மேல் நான் சந்தேகம் கொள்ள முடியாத அளவுக்கு, அவர் அற்புதமாக என்னிடம் நடித்திருந்த நடிப்பு அத்தகையது.

''இவனுக்கு அப்பொழுது ஏழு வயது.

''அவர் இவனை அழைத்துக்கொண்டு போய்விட்டார். சில நாட்கள் இவனைப் பார்க்காமல் அலைமோதினேன். துடியாகத் துடித்தேன். இவனை அவர் என்னிடம் அனுப்பவேயில்லை. சில நாட்கள் அவர் மட்டும் வருவார். என்னிடம் பேசமாட்டார். 'பாஸ்கர் எங்கே' என்பேன். பதில் சொல்லமாட்டார். எனது ஏக்கத்தை அவரிடம் எவ்வளவோ வழிகளில் எடுத்துக் கூறினேன். அதை உணரும் மனிதாபிமானம் அவரிடம் இருப்பதாகத் தெரியவில்லை. ரொம்பவும் இடைவெளிவிட்டு வந்து கொண்டிருந்தவர் திடீரென்று வருவதையே நிறுத்தி விட்டார். நான் தேடிப் போகிற சமயங்களில்கூட அவர் தம் வீட்டில் இருப்பதில்லை. ஒரு முறை தம் பங்களாவின் மேல் மாடியில் இருந்து கொண்டே இல்லை என்று சொல்லி அனுப்பியிருக்கிறார். அவர் முன்னால் போய் நின்று, 'என் குழந்தையைப் பார்க்க வேண்டும்' என்று ஆவேசம் வந்தவன்போல் கத்தினேன். அவர் அதை அலட்சியம் செய்து அவனைப் பார்க்க முடியாது என்று கூறிய விதமும், நான் 'ஏன்' என்று வினவிய விதமும் 'காரணம் சொல்வதற்கில்லை; இனி பாஸ்கரை நீ மறந்துவிட வேண்டியதுதான்' என்று அவர் கூறிய இரக்கமற்ற பேச்சும்தான் அவனுக்காக வழக்காட என்னைத் தூண்டியது. இவனுடைய 'கார்டியன்ஷிப்'புக்காக வழக்காட வேண்டிய துர்ப்பாக்கிய நிலை வந்துவிட்டது. நீதிமன்றம் போவதைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும் என்று நானே இரண்டு மூன்று முறை அவரைச் சந்திக்க முயன்றேன். அவர் இடம் தரவில்லை. எனது வக்கீலை அனுப்பிச் சமரசத்துக்கு முயன்றேன். அவர் கேட்பதைத் தருவதாகக் கூறினேன். எதற்கும் அவர் இசைவு தரவில்லை. பிடிவாதமாக இருந்து விட்டார்.

'' வழக்கும், உரிமைக்காக நான் போராடிய போராட்டமும் முடிந்தன. இந்தச் சந்தர்ப்பங்களில் எனக்கு எல்லா வழிகளிலும் கலையுலக நண்பர்கள் உதவினர். சட்டம் தெரிந்த சந்தானத்தின் பரிபூரண ஒத்துழைப்பும் இருந்தது.

'' எனது உழைப்பால் சேர்த்த பொருட்களை என்னை வஞ்சித்து அவர் பாதிக்கு மேல் எடுத்துக் கொண்டுபோய் விட்டதற்காக நான் கொஞ்சம்கூடக் கவலைப்படவில்லை. இவனைப் பிரித்துக் கொண்டு போனதற்குத்தான் நான் மிகவும் வருந்தினேன். பிறகு அதுவும் சரியாகி விட்டது.

'' ஏழு அல்லது எட்டு வயதில் என்னை விட்டுப் பிரிந்து போனவன், பன்னிரண்டு வயதில் என்னைத் தேடிக் கொண்டு, ஒரு முறை, அதுவும் முதல் முறை வந்தான்.

'' என்னை அவன் 'அம்மா' என்றுதான் அழைத்தான். அந்த அழைப்பு ஒரு நல்ல ராகமாகச் சில நிமிஷங்கள் ஒலித்தது. அவன் கையில் ஒரு கடிதம் கொண்டு வந்திருந்தான். அது தான் அவன் கொண்டு வந்த முதல் கடிதம். அவன் என்னிடம் அதிகம் பேசவில்லை. 'பேசக் கூடாது' என்று அவர் கண்டித்திருக்கலாம். கடிதத்தில், அவருடைய உடனடித் தேவைக்கான உதவி கேட்கப்பட்டிருந்தது. நான் மறுப்பேதும் கூறாமல் அவர் கேட்ட தொகையைக் கொடுத்தனுப்பினேன்.

''அவருடைய நிலையைச் சந்தானம் அவ்வப்பொழுது கூறுவார். பாஸ்கரின் படிப்பு, கல்லூரியில் அவன் அதிக மண்டுவாக இருப்பது, நடவடிக்கையில் ஓர் ஒழுங்கற்ற தன்மை எல்லாவற்றையும் சொல்வார்.''

'' உங்களுக்குச் சந்தானத்தை ரொம்ப நாட்களாகவே பழக்கம்போல் இருக்கிறது !''

''அவர் வக்கீல். என் போன்றவர்களுக்கு அவருடைய அறிமுகம் ரொம்பவும் இன்றியமையாதது இல்லையா ?

'' நான் பாஸ்கரனை என் நேரடிக் கண்காணிப்பில் வைத்துக் கொள்ளவில்லையென்றாலும், அவனுடைய தாறுமாறான வளர்ச்சியைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். அன்று அவன் பணம் கேட்டுக் கொண்டு வந்த முதல் கடிதத்துக்குப்பின் அடிக்கடி வரத் தொடங்கினான். நானும் சலிக்காமல் கொடுத்துக் கொண்டுதான் இருந்தேன்.



சில சமயம் பாஸ்கரனிடம் அவரைப் பற்றித் திட்டுவேன். அவனையும் திட்டி அனுப்புவேன். அவைகளையெல்லாம் பொருட்படுத்தாமல் அவன் போய்விடுவான். கிட்டத்தட்ட ஒரு ஜடம்போல் இருக்கிறான். அவனுக்கும் அவன் தந்தைக்கும் வேண்டியது பணம்... பணம்..... அவ்வளவுதான். இத்தனை நாட்களில் எவ்வளவு பணம் தந்திருப்பேன், தெரியுமா ? ஒரு நாளாவது என் உடம்பைப் பற்றியோ, என் நிலைமை பற்றியோ ஒரு வார்த்தைகூட அவன் விசாரித்ததில்லை. அவனை அவர் அப்படி வளர்த்து வைத்திருந்தார். உடல் நலம் சரியில்லாமல் படுக்கையில் படுத்திருப்பேன். பணத்துக்கு அவரிடமிருந்து கடிதம் கொண்டு வந்து நிற்பான்.

" 'உனக்கு என் நிலைமை தெரிகிறதா இல்லையா? பின் ஏன் நிற்கிறாய்?' என்று நான் கடுமையாகச் சொன்ன பின்புதான் நகர்வான். எப்படித் தாய்ப் பாசம் பார்த்தாயா? நான் எதற்காக இவர்களுக்குப் பணம் தர வேண்டும்?"

" ஏன் அந்தப் பழக்கத்துக்கு இடம் தந்து கொண்டீர்கள் ?"

''இது இப்படி வளரும் என்று நான் நினைக்கவில்லை; ஒன்று. இரண்டாவது, இவர்கள்மேல் எனக்கு இயல்பாக உள்ள இரக்கம். நான் பாஸ்கரை எண்ணித்தான் அழுவேன். அவன் சிறு பயிர். ஏழு வயதில் என்ன தெரியும்? 'உனக்கு யார் வேண்டும், அப்பாவுடன் இருக்கிறாயா, அம்மாவுடன் இருக்கிறாயா?' என்று நீதிபதி கேட்டபோது, 'எனக்கு அப்பாதான் வேண்டும், அவருடன்தான் போவேன்' என்று கூறி விட்டான். இதற்காக அவன் மீது நான் கோபம் கொள்ளவேயில்லை. அவனுடைய அறியாமை அவனைச் சொல்ல வைக்கிறது என்று இருந்தேன். எனக்கு அவர் மேல்தான் கோபம். அவருடன் அவனும் அலைவதையும், அவரிடம் அவன் அல்லல்படுவதையும், குடித்துவிட்டு அவர் அட்டகாசம் செய்வதையும் பிறகு அவன் என்னைத்தேடி வந்த சமயங்களில் சொல்வான். பணம் கையில் இல்லாத போது இவனைப் போட்டு அடிப்பாராம். இவன் பயத்துடன் என்னிடம் வந்து அழுவான். இவன் பரிதாபத்தைப் பார்த்துப் பார்த்தே நான் பணம் தருவேன்'' என்றவள் நீண்ட பெருமூச்சுடன், ''உற்சாகமாக இருக்க வேண்டிய நாட்களை எல்லாம் வேதனையுடனும் பயத்துடனும் கழித்தேன்'' என்று கூறினாள்.

அவள் அலுவலகம் விட்டு மாலை வீடு திரும்பியபோது மதுராம்பிகை அறையில் யாருடனோ சத்தம் போட்டுப் பேசுவதைக் கேட்டு உள்ளே எட்டிப் பார்த்தாள்.

# வருவான் ஒருவன் வையத் தலைவன்

''ஒரு நல்ல தலைவர் நமக்கு வரவேண்டும் என்று பிரார்த்திப்போம்'' என்பதே தலைவர் ராஜாஜி கடைசியாக மக்களிடையே பேசிய கருத்து.





வருவான் ஒருவன் வையத் தலைவன்
வரவை என்றும் எதிர்பார்ப்போம்.
தருவான் நலமே, செருவான் தீமை,
தலைவன் வர நாம் தவம்ஏற்போம்

ஊழிகள் தோறும் உணர்வுகள் மங்கி
உலகின் தடமே தடுமாறிப்
பாழென வீழுமுன் காத்திடும் அவனைப்
பாரில் மீண்டும் எதிர்பார்ப்போம்.

கண்ணன் ராமன் பகவான் புத்தன்
கருணை ஏசு, நபி என்றே
மண்ணில் எண்ணில் முறைகள் வருவான்
மறுபடி மறுபடி, வரவேற்போம்.

அரக்கர் தீமை அழித்திட வருவான்
அடிக்கடி என்றால் இன்றிங்கே
அரக்கத் தனங்கள் எத்தனை! இதனை
அழிக்க மீண்டும் எதிர்பார்ப்போம்.

உண்மை தேய்ந்தால், ஒழுக்கம் மாய்ந்தால்
உத்தமர் உள்ளம் மிகநைந்தால்,
இன்மை நாட்டிட வல்லவன் எவனோ,
திரும்ப அவனை எதிர்பார்ப்போம்.

நாதன் கண்ணன் வரவை நோக்கும்
நாயகி கோபியர் போல், தேவ -
தூதன் வரவை நோக்கிடு மூவர்
தூயோர் போல, எதிர்பார்ப்போம்.

நன்றே வாழ, தீமைகள் வீழ,
நமக்கோர் தலைவன் வரவேண்டும்.
இன்றே நாளைப் பொழுதோ அறியோம்
எந்தக் கணமும் எதிர்பார்ப்போம்!

தம்பி சீனிவாசன்

ஸுஜாதா அளிக்கும்

# ராஜா

திரைக்கதை · டைரக்ஷன்
A.C. திருலோக்சந்தர் M.A



கெயிட்டி
மினர்வா A/C
ராஜகுமாரி A/C
தங்கம்
மற்றும்
தென்னாடெங்கும்.



அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...

பட்டுப் போன்ற டால்க்...அன்பைப்போல மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி அரவணைப்பது. உங்களை மோகன வாகிசியில் ஆழ்த்தும் அருமையான புது நறுமணம் கொண்டது. அதுவே வீல் ஆ:ப் லவ். ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத் தாராளமாக மேனியெங்கும் தூவிக் கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம் நீண்ட நேரம் உங்களைத் தழுவி, உங்களைச் சுற்றிலும் கமகமவென வீசிக் கொண்டிருக்கும். வீல் ஆ:ப் லவ் உங்களை அலங்கரிக் கட்டும். ஹேலோ மட்டுமே அளிக்கும் வாசமுள்ள அன்புத் திரை அது.
ஹேலோ வீல் ஆ:ப் லவ் டால்க் வாசமுள்ள அன்புத்திரை...
அன்பைப் போல மிருதுவானது.

அவளுக்கு உகந்தது
ஹேலோ
வீல் ஆ:ப் லவ்
டால்க்




HT.G.I.TH

மதுராம்பிகை பேசுவதிலிருந்து அவன்தான் பாஸ்கரனாக இருக்கவேண்டுமென யூகித்தாள்.

அந்த வாலிபனுக்கு இருபத்தைந்து வயதுக்கு மேல் இருக்கும். நல்ல உயரம். முரட்டுத்தனமற்ற சாதுவான தோற்றம். பீடில்ஸ் பாணியில் கீழ் நோக்கிப் படிய வாரிய தலைமயிர். இடுப்பில் பட்டை பெல்ட். உடலைப் பிடித்த மாதிரி பாண்ட். முழுக் கைச் சட்டையைப் பாண்டினுள் விட்டுப் போட்டுக் கொண்டிருந்தான்.

'' அவர் நேற்றுக் கடிதத்தில் எழுதியது உண்மையென்றால் சொல். நான் நிச்சயம் தருகிறேன். நான் தருகிற பணம் உனக்குப் பயன்பட வேண்டும் என்பதால் கூறுகிறேன். என்னை ஏமாற்றி, என் பணத்தை, உன்னைப் பயன்படுத்தி அவர் சுரண்டிக் கொள்ளத் தயவுசெய்து நீ இனி இடம் தராதே...''

சாந்தா வேகமாகப் பங்களாவுக்கு வெளியே வந்து நின்று கொண்டாள். அவன் முகத்தில் எவ்வித ஏமாற்றத்தின் சாயல்களுமின்றி, மதுராம்பிகை கோபப்பட்டதால் எவ்வித மனத்தாங்கல்களுக்கும் ஆளாகாதவன் போல் ரொம்பவும் சாதாரணமாக வெளியே வந்ததைப் பார்த்துவிட்டு அவனுடன் வெளிக் காம்பவுண்டு வரையில் வந்தவள் அவனை நிற்க வைத்துப் பேசினாள்....

* * *

''உங்களுக்கே இது நன்றாக இருக்கிறதா? ஒரு வயதான பெண்மணி. தனியாக வாழ்கிறாள்.... அதிகமான தொல்லைகளைத் தராதவள், நீங்கள் கேட்கும்போதெல்லாம் இல்லை என்று சொல்லாமல் பணம் தந்துகொண்டேயிருப்பவள்.... இவை எல்லாவற்றுக்கும் மேலாக அவள் உங்கள் தாய்.''

பாஸ்கரன் சாந்தாவைத் திரும்பிப் பார்த்தான்.

''ஆமாம்; உங்கள் தாய்....'' என்றாள் அதற்கோர் அசாதாரண அழுத்தம் கொடுத்து.

''எனக்கும் தெரியும்'' என்றான் அவன்.

சில கணங்கள் மௌனமாக நின்ற பாஸ்கர், ''என்ன செய்யட்டும்? என்னுடைய அப்பா எனக்குச் செலவுக்குத் தருவதில்லை. என் தேவைகளைக் கவனிப்பதில்லை. ஏதாவது கேட்டால் இங்கே அனுப்பி விடுகிறார்'' என்றான்.

'' நீங்கள் மதுராம்பிகையின் வயிற்றில் பிறந்திருந்தாலும் சட்டப்படி நீங்கள் இவரிடம் பணம் கோருவது












நியாயமற்றது என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.''

''நான் எனக்கு மட்டுமா கேட்கிறேன்? அப்பாவுக்காகவும்தான்.''

''அவர் பெரிய மனிதர், படித்தவர், தனி வீடு, கார் எல்லாம் இருந்தும்...''

''நான்சென்ஸ். அப்பா இப்படிச் சொல்லிச் சொல்லி ஊரை ஏமாற்றுகிறார். அவருக்கு ஒன்றுமே கிடையாது. எல்லாவற்றையும் தோற்றுவிட்டு இன்று அவர் பணத்துக்கு அலேகிறார்.''

''நீங்கள் ஏதேனும் உத்தியோகம் பார்க்கிறீர்களா?''

''உத்தியோகமா? நான் எங்கே ஒழுங்காகப் படித்தேன்? யார் என்னைப் படிக்க வைத்தது?''

''நீங்கள் படிக்கவில்லை?''

''படித்தேன். என் விருப்பத்தை அப்பா எப்பொழுதோ புறக்கணித்து விட்டார். பி. ஏ.வைக்கூட என்னால் முடிக்க முடியவில்லை. என் படிப்பில் அவருக்குச் சிரத்தையே கிடையாது.''

''காரணம்?''

''எனக்குத் தெரியாது.''

''அப்பா என்னைப் பயமுறுத்தி வைத்திருக்கிறார். ஏதாவது போய் சொன்னால் கொலை செய்து விடுவேன் என்று கூறி யிருக்கிறார்.''

சாந்தா பாஸ்கரை இரக்கத்துடன் நோக்கினாள். அவன் முகம் தூரத்தில் எதையோ கண்டு மருண்டது. செய்கையில் ஒரு படபடப்புத் தென்பட்டது.

''சரி, சரி...நான் போய்ட்டு வரேன். உங்க பேர் என்ன?... நாங்க உள்ளே பேசிக்கொண்டிருக்கும்போது எட்டிப் பார்த்தீர்கள் இல்லையா? நீங்க யாரு? அம்மாவுக்கு உறவா?'' என்று படபடவெனக் கேள்வியை மட்டும் கேட்டு விட்டுப் பதிலுக்குக் காத்திராமல் காம்பவுண்டை விட்டு வெளியே வந்தான். பழைய கரிய நிறக் கார் ஒன்று கேட்டைத் தாண்டிச் சிறிது தூரம் சென்று நின்றது. அதைப் பின் தொடர்ந்து பாஸ்கர் ஓடினான். கேட்டைத் தாண்டி வெளியே வந்த சாந்தா அங்கே நின்ற வண்ணம் காரைப் பார்த்தாள்.

காரின் கதவைத் திறக்காமல் உள்ளே டிரைவர் ஆசனத்தில் அமர்ந்திருந்தவர் அவனிடம் ஏதோ கேட்கிறார். அவன் வாய் திறக்காமல் மௌனமாக நிற்கிறான். காரின் உள்ளே அமர்ந்த வண்ணம் அவனுடைய சட்டையைப் பிடித்து அருகில் இழுக்கிறார். சினத்துடன் ஏதோ கேட்கிறார். அதற்கும் அவன் பதில் ஒன்றும் கூறாமல் இருந்திருக்க வேண்டும். சட்டையைப் பிடித்து இழுத்த வேகத்தைப் போலவே அந்த வேகத்தைத் தளர்த்தாமலேயே பின்னே தள்ளுகிறார். சாலையில் அவன் வேகமாகப் பின்னோக்கி நகர்வதிலிருந்து தெரிகிறது. நல்லவேளை வேறு கார், லாரி ஏதும் அச்சமயம் வரவில்லை. ஒரு விரலைக் காருக்கு வெளியே நீட்டி எச்சரிப்பதுபோல் ஏதோ கூறி விட்டுக் காரைக் கிளப்பிக் கொண்டு போய்விடுகிறார்.

கார் வேகமாகப் போவதையே சில கணங்கள் பார்த்துக் கொண்டு அவன் நின்றான். ரொம்பவும் சோர்ந்த முகத்துடன் சாந்தாவைத் தூரத்திலிருந்தே பார்த்துவிட்டுக் கார் சென்ற திசையில் திரும்பி நடந்தான். (தொடரும்)



### துணிச்சல்

ஜனாதிபதி நிக்ஸனைப் பற்றி 'டைம்' பத்திரிகை ஒரு சர்வே நடத்தியது. நிருபர் ஒரு பெண்ணைக் கேட்டபோது அவள் சொன்னது :

''நிக்ஸன் போய்விட்டால் நாடு என்ன ஆகும் என்ற கவலையை விட அவர் இருந்து விட்டால் என்ன ஆகும் என்ற கவலே அதிகமாக இருக்கிறது.''

— 'டைம்'-பாலி



அமிர்த பஜார் பத்ரிகா - பாபு

### கடமை ஒரு சொத்து

மிகவும் சிறியவனுக்குக்கூடச் சொந்தக் கடமை என்று ஒரு சொத்து இருக்கிறது. வாழ்க்கையாகிய சிறு பெட்டியில் தன் சொந்தக் கடமையைக் காப்பாற்றி அவன் பிழைக்கிறான். சரித்திரத்தில் அவன் பெயர் இடம் பெறாது. கெட்ட பெயர் ஏற்படவும் செய்யலாம். ஆனால் அவனுடைய உள்ளத்தினுள் உறைபவருடைய சபையில் அவன் பெயர் நிலைத்து நிற்கும். பேராசைக் குட்பட்டுச் சொந்த வேலையை விட்டுப் பிறனுடைய கடமைகளுக்காகப் பிரசாரம் செய்யச் சென்றால், சந்தை சாவடிகளில் அவன் பெயர் நிலைக்கலாம். பிரபுவின் சபையில் அவன் பெயர் எடுபடாது.



எழுதியது : டாகுர்
அனுப்பியது : தம்பி சீனிவாசன்

# Hosiery made of pure GRASIM STAPLE FIBRE

has a better appearance, fuller feel, equal stretch, excellent durability, and high dimensional stability

If you are in the manufacturing line, Grasim Staple Fibre could lead you to bigger Sales, bigger Profits. A slight modification in your knitting methods such as increasing the courses per inch will help you to manufacture firm and compact knitted garments from 100% Staple Fibre.




**THE GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD.**
Birlagram, Nagda (M.P.)

SOBHAGYA-GR 11





# ராஜாஜியின் இணையற்ற பணி

பி. சிவராவ்

ராஜாஜியின் பணி ஈடு இணையற்றது தான்! கால அளவின் விஸ்தாரத்திலும் சரி, பல வகைத்தானது என்பதிலும் சரி, சிறப்புத் திறத்திலும் சரி — அவரது பணி ஒப்பற்றதாகும். ஆரம்ப காலத்தில் சேலம் நகரசபையில் அவர் செய்த பணிகளை விடுத்து, தேசத்தின் முக்கியமான தலைவர்களில் ஒருவராக இந்திய சுதந்திரத்துக்காக அவர் ஆற்றிய பணிகளை வரிசைப்படுத்திப் பார்த்தாலும், அது தன்நிகர் இல்லாதது எனக் காண்போம்.

முதலில் ஸ்ரீமதி அன்னிபெஸண்ட் அம்மையின் ஹோம்-ரூல் லீகின் அங்கத்தினராகவே ராஜாஜி அகில இந்திய அரசியலில் பிரவேசித்துத் தமது தனித்தன்மையை வெளிப்படுத்தினார். அக்காலத்தில் சென்னை கோகலே ஹாலில் கூடும் மக்கள் ராஜாஜி அரசியல் பிரவேசம் செய்தவுடனேயே 'சுதந்திர இயக்கத்துக்கு ஒரு புதிய சக்தி வந்து சேர்ந்திருக்கிறது' எனக் கண்டு கொண்டனர். அவரது பேச்சில் பிரிட்டிஷ் ஆட்சியாளரையும், ஹோம்-ரூல் இயக்கத்தைக் கண்டனம் செய்வோரையும் பற்றிக் குறிப்பிடும் போது வெற்று வசைமாரியோ, துவேஷ உணர்ச்சியோ சிறிதும் இராது. அமைதியாக, உணர்ச்சி வசப்படாமல், ஆனால் தர்க்க ரீதியில் தகர்க்கவொண்ணாத விதத்தில் பேசுவார். இந்த யோக்யதாம்சங்களின் மீதே முதல் உலகப் போர் நடந்த அந்தப் பழங் காலத்தில் ராஜாஜி முன்னணிக்கு வந்தார்.

அரசியல் வாழ்வில் ஈடுபட்டுச் சில ஆண்டுகளிலேயே காந்திஜியைத் தீவிரமாகப் பின்பற்றும் ஒருவராக ஆனார் ராஜாஜி. அந்தக் காலத்தில் அவர் எல்லா விஷயங்களிலும் காந்திஜியின் முடிவையே ஏற்றுக் கொள்வதில் நிறைவு கண்டார். குறிப்பாக, காங்கிரஸின் முன் காந்திஜி வைத்த நிர்மாணத் திட்டத்தில் தம்மால் இயன்ற ஈடுபாடு அவ்வளவையும் செலுத்தினார். (சுதந்திரம் கோரி பிரிட்டிஷாரை எதிர்ப்பதோடு நில்லாமல் சமூகத்துக்கு ஆக்கமான கதர், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு, கிராம முன்னேற்றம் முதலியவற்றில் ஈடுபடுவதே காந்திஜியின் நிர்மாணத் திட்டம் என்பது.)

மாண்டேகு சீர்திருத்தத் திட்டத்தின் கீழ் இந்தியாவில் இரண்டாவது பொதுத் தேர்தல்கள் நடத்த பிரிட்டிஷ் அரசால் உத்தேசிக்கப்பட்டது. காங்கிரஸ்காரர்கள் இத்தேர்தல்களில் போட்டியிட்டுச் சட்டசபைக்குச் செல்வதற்குச் சாதகமான சூழ்நிலை நிலவியதாக ஸி. ஆர். தாஸும் மோதிலால் நேருவும் முடிவு செய்தனர். காந்திஜியோ இதற்கு ஒப்பவில்லை. வேல்ஸ் இளவரசர் எனும் எதிர்காலப் பிரிட்டிஷ் மன்னர் இந்தியாவுக்கு வருவதைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று காந்திஜி கருதியதை இவ்விருவர் வெளிப்படையாகவே ஏற்கவில்லை. பகிஷ்காரத்தைக் கைவிட்டால் மாகாண சுயாட்சியை விரைவுபடுத்துவதாக வைஸ்ராய் ரீடிங் பிரபு கூறினார். இதைக்





இடது பக்கம் மேலே: வட்டமேஜை மகாநாட்டுக்குப் புறப்படுகிறார் காந்திஜி. 2. ஜின்னாவும் ராஜாஜியும்.

கீழே: 1937 ல் சென்னை மாகாணப் பிரதமராகி நிர்வாகத் திறமைக்காகவும் உத்தியோக வர்க்கத்தைச் சிறிதும் கட்சியுடன் சம்பந்தப்படுத்தாமல் இருந்ததற்காகவும் ஏகமனதாகப் புகழப்பட்டார் ராஜாஜி.

இந்தப் பக்கம் - மேலே: 1942 ல் கிரிப்ஸ் தூது.

கீழே: அணு ஆயுத சோதனைகளை நிறுத்தவேண்டும் என்பதற்காக காந்தி சமாதான ஸ்தாபனம் அனுப்பிய தூதுகோஷ்டியில் ராஜாஜியுடனும், ஆர். ஆர். திவாகருடனும் இக்கட்டுரை ஆசிரியர் ஸ்ரீ சேரா வும் இடம் பெற்றிருந்தார் (வலதுகோடி). ஜனாதிபதி கென்னடியையும் ஐ. நா. பிரதிநிதிகளையும் மற்றும் பல உலகத் தலைவர்களையும் பல்வேறு தலைநகரங்களில் சந்தித்தனர். படத்தில் தூதுகோஷ்டியுடன் நியூயார்க்கில் அளவளாவுகிறவர் ஜப்ருல்லாகான்.

காந்திஜி நிராகரித்து விட்டார். ''என் சாம்ராஜ்யத்துக்குள் மான்டேகு திட்டம் இந்திய சுயராஜ்யத்தைத் தொடங்கி வைக்கிறது'' என்றே ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் கூறியிருந்தார். அந்த அளவுக்கு இந்தத் திட்டம் சென்றதோ, இல்லையோ, ஓரளவுக்கேனும் பிரிட்டிஷ் ஆதிபத்தியத்தைத் தளர்த்த உதவியது. ஆயினும் திட்டத்தை காந்திஜி ஏற்கவில்லை. இதில் ஸி.ஆர் தாஸும், மோதிலாலும் மாறுபாடு கொண்டனர். இவ்வாண்டுகளில் ராஜாஜி முற்றிலும் காந்திஜியின் கரப்பிலேயே இருந்தார். 1922ல் கயையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் சட்டசபைப் பிரவேசம் கூடாது என்று ஒத்துழையாமை செய்கிற காந்திஜியின் திட்டத்துக்குப் பெரிய வெற்றியை ஈட்டித் தந்தவர் ராஜாஜிதான்.

1924ல் பிரிட்டிஷ் பிரதம மந்திரியான தொழிற்கட்சித் தலைவர் ராம்ஸே மாக்டொனுல்ட் விரைவிலேயே இந்தியாவைச் சுயாட்சி உரிமையுள்ள டொமினியனாக்குவது தமது கொள்கை எனக் கூறியிருந்தார். 1926ல் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய மகாநாடு ஒன்று நடைபெற்றது. அப்போது கூறப்பட்ட டொமினியன் அந்தஸ்து பரிபூரண சுயராஜ்யத்தையும் விட ஒரு படி உயர்ந்த ஸ்தானத்தை இந்தியாவுக்கு வழங்குகிறது என்று ஸி. ஆர். தாஸ் கருதினர். 1929ல் இரண்டாம் முறை பிரதமரான மாக்டொனுல்ட், வருஷக் கணக்கில் தள்ளிப் போடாமல் மாதக் கணக்கிலேயே இந்த டொமினியன் அந்தஸ்தை அளிப்பதாகப் பிரகடனம் செய்தார். இந்தியாவில் வைஸ்ராயாக இருந்த இர்வின் பிரபுவும் மான்டேகு திட்டத்தின் இயற்கை விளைவாக டொமினியன் அந்தஸ்து உண்டாகி விடும் என்று இந்திய மக்களுக்குக் கூறினர்.

பிரிட்டிஷ் பார்லிமென்டில் பெரும்பான்மை பலம் பெற்றிராத ஒரு சர்க்காரின் பிரதமரும், வைஸ்ராயும் எதிர்க் கட்சியினரின் சம்மதத்தைப் பெறுமல் இவ்வாறு பிரகடனம் செய்திருப்பர் என நம்புவதே கடினம் தான். ஆனல் பிற்பட்ட நிகழ்ச்சிகள் காட்டுவது இதைத்தான்.

காங்கிரஸார் பங்குபற்ற மறுத்த முதலாம் வட்டமேஜை மகாநாட்டில் மாக்டொனுல்ட் இந்திய தேசிய உணர்ச்சியை மதித்துத் தந்த ஒரு பெரும் சலுகை இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தின் நிர்வாகச் சுமையை மட்டும் தராமல், பூரணப்பொறுப்பு பெற்ற ஆட்சிக்கு உரிய கௌரவத்தையும் உரிமையையும் கூடத் தருவதாகக் கூறியதேயாகும். இந்த வட்சியத்தின் மீதே வட்ட மேஜை மாநாடு கூட்டப்பட்டது என்றுர் அவர். துரதிருஷ்ட வசமாக இந்தப் பிரகடனம் லண்டனில் வெளியாகிச் சில நாட்களிலேயே மோதிலால் நேரு காலமாகிவிட்டார். பிரிட்டிஷ் அரசிடம் ஒரேயடியாக எதிர்ப்புக் காட்டி வெளியேறச் சொல்லாமல் இணக்கம் காட்டிச் சிறுகச் சிறுக விடுதலை பெற முயன்றவர் அவர்.

இச்சமயத்தில் தீவிரவாதியான காந்திஜியையே பின்பற்றிய ராஜாஜி என்ன எண்ணினுர்? நிர்மாணத் திட்டத்தின் விஷயத்தில் அவருக்குக் காந்திஜியிடம் இருந்த ஆழ்ந்த விசுவாசம் சலிக்கவில்லை. ஆனல் சம்பவங்கள் போகிற போக்கைத் தர்க்க ரீதியில் ஆய்ந்து பார்த்தால் ஆட்சியாளரை முற்றிலும் எதிர்க்காமல் சமரஸத் திட்டங்களுக்கு ஒத்துப் போக வேண்டியதே என்று ராஜாஜி நிச்சயமாக உணர்ந்திருக்க வேண்டும். ஏனெனில் அவர் தில்லியில் தேஜ்பகதூர் ஸாப்ருவும், டாக்டர் எம். ஆர். ஜயகரும் இந்திய — பிரிட்டிஷ்



உடன்பாட்டுக்குச் செய்த முயற்சிகளில் பக்கபலமாக நிற்கத் தொடங்கினர்.

இம்முயற்சிகளின் விளைவாகவே காந்திஜிக்கும் இர்வின் பிரபுவுக்குமிடையே ஒப்பந்தம் உண்டாயிற்று. இவ்வொப்பந்தத்தினால்தான் காந்திஜி காங்கிரஸின் பிரதிநிதியாக லண்டனில் நடைபெற்ற இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டில் கலந்துகொள்ள முடிந்தது. இந்த மகாநாட்டில் காந்திஜியிடம் ஒரு புதிய சமரஸ மனப்பாங்கு காணப்பட்டது குறிப்பிடத் தக்கது. பிரிட்டனின் பிரதிநிதிகள் இறந்த காலத்தை மறந்து, சமத்துவ பாவத்துடன், பாகஸ்தர்கள் போல் இந்தியர்களிடம் நடந்துகொள்ள வேணுமென்று காந்திஜி மிகுந்த உருக்கத்துடன் அறைகூவல் விடுத்தார். இர்வினுடன் ஒப்பந்தம் செய்து கொள்வதற்குக் காந்திஜியை வற்புறுத்தியதிலும், அவரை வட்டமேஜை மகாநாட்டில் பங்கு கொள்ளச் செய்ததிலும் ராஜாஜி மிகவும் சக்திகரமாகப் பங்கு ஆற்றினார். ஆனால் இது அவ்வளவும் இரைக்குப் பின்னரே அவர் செய்த பணியாகும்.

ஆனால் முன்பே சொன்னது போல், இந்தியாவுக்குச் சுய உரிமைகள் தரவேண்டும் என்று அன்றைய பிரிட்டிஷ் அரசு வாக்குறுதி தந்த தினத்தும் எதிர்க் கட்சியின் எதிர்ப்பினால் பிசுபிசுக்கலாயிற்று. பிரிட்டிஷ் பொதுச்சபையில் மெக்டொனால்டையும், அவரது இந்தியக் கொள்கையையும் ஆட்சேபித்துக் கண்டனத்தை வீறு கொண்டு ஒலித்து விட்டார் சர்ச்சில். எதிர்ப்புச் சக்திகள் கையோங்கின; பாதகமான சூழ்நிலையில் மெக்டொனால்டின் கொள்கையை வைத்துவிட்டன. முடிவில் அவர் பதவியிலிருந்தே விலக்கப்பட்டார். அவரது திட்டங்களும் கூட்டுப் பொதுக் குழுவினர் செய்த மாற்றங்களால் ஒரேயடியாக நீர்த்துப் போய்விட்டன.

இந்த நிலையில்தான் 1935ல் புதிய அரசியல் சாஸனம் கொண்டுவரப் பட்டது. அது சுதந்திர இயக்கத்துக்கு விரோதமான கன்ஸர்வேட்டிவ்களுக்கு எவ்வளவு உவப்பாக இருந்தது என்பதை, அவர்களது தலைவர் நெவில் சேம்பர்லின், ''இதில் மனித புத்தி செய்யக் கூடிய அத்தனை சாதுரியத்தையும் காணலாம்'' என்று கூறியதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அன்றைய நிலவரத்தை ஆராய்ந்து பார்த்த ராஜாஜி, நீண்ட கால அடிப்படையில் நோக்கினால் இந்தச் சாஸனத்தை இந்தியா ஏற்று, அதன் மூலம் காந்திஜியின் நிர்மாணத் திட்டத்தை இயன்ற அளவு காரியமாக்குவதே மிகவும் விவேகமாகும் என முடிவு செய்தார். காந்திஜியை இந்தக் கருத்துக்கு இசைய வைப்பதிலும் பெரும் பாகம் ஏற்றார். இதன் விளைவாகவே, புது சாஸனப்படி மாகாண சட்டசபைகளுக்கென நடந்த தேர்தலில் காங்கிரஸ் போட்டியிட இசைந்தது.

இந்தத் தேர்தலில் காங்கிரஸுக்கு மிகவும் சிறுவாரி ஸ்தானங்களே கிடைக்கும் என்று பிரிட்டிஷ் அதிகாரிகள் தப்புக் கணக்குப் போட்டார்கள். இதற்குக் காரணம், வில்லிங்டன் பிரபுவின் ஆட்சியில் காங்கிரஸ் தலைவர்கள் நீண்ட காலம் சிறையில் இருந்ததால் அக்கட்சிக்கு மக்கள் தொடர்பு நசித்திருக்குமென்றும், தலைவர்கள் இல்லாத கட்சி உறுப்பினர் ஒழுங்குப்பாட்டிலிருந்து விலகியிருப்பர் என்றும் அவர்கள் எண்ணியதே. வாஸ்தவத்திலோ தேர்தல் முடிவுகள் சகலருக்கும் ஆச்சரியமூட்டியது — காங்கிரஸுக்கும் கூடத்தான். அப்படிப்பட்ட பெரும்பான்மை அக்கட்சிக்குக் கிடைத்தது.

மந்திரிசபை அமைத்து நிர்வாகம் ஏற்கும் விஷயமாகக் காங்கிரஸுக்குள் கருத்து வேற்றுமைகள் தோன்றி ஒரு முட்டுக்கட்டை நிலையே உண்டாயிற்று. 1937 ஏப்ரில் தொடக்கத்தில் இவ்விஷயமாகத் தீர்வு காண ராஜாஜி என்னைத் தில்லியில் என் வீட்டுக்கு வந்து இருமுறை சந்தித்து ஆலோசனை நடத்தியது என் நினைவில் அழுத்தமாக உள்ளது. அப்போதைய அரசியல் சாஸனத்தையே நொறுக்கித் தள்ள வேண்டும் என்று ஜவாஹர்லால் நேரு கோஷ்டியினர் பிடிவாதமாக இருந்தனர். அந்தச் சாஸனத்தை அழிப்பதே அதனிடத்தில் புதிய சுதந்திர சாஸனத்தை அமைப்பதற்கு முகவுரையாகும் என்பது அவர்கள் கருத்து. ராஜாஜியோ அந்தச் சாஸனத்துக்கு உட்பட்டே மந்திரி சபை அமைப்பதால், அது தரும் அதிகாரங்களைக் கொண்டு காந்திஜியின் நிர்மாணத் திட்டங்களை அமல் செய்யலாம் என்ற ஆக்க ரீதியான யோசனையை ஆதரித்தார். இது குறித்து அவர் ஒரு தீர்வுச் சூத்திரமும் தயாரித்தார். இந்தச் சூத்திரத்தைப் பற்றி என்னுடன் ஆலோசனை கலந்தார். காந்திஜி இதை அங்கீகரித்தார். இச் சூத்திரம் காட்டும் ஆக்கபூர்வப் பாங்கும், இதைப் பிரிட்டிஷார் ஏற்பராயின் இரு தரப்பும் ஒப்பக் கூடிய விதத்தில் சமரஸ உடன்பாடு காண முடியும் என்று ராஜாஜி தன்னம்பிக்கையோடு கூறியதுமே இதற்குக் காந்திஜியின் சம்மதத்தைப் பெற்றுத் தந்திருக்க வேண்டும். இது ராஜாஜியின் மகத்தான வெற்றியாகும்.

அடுத்த இரண்டு ஆண்டுகள் ராஜாஜி, சென்னை மாகாணத்தின் பிரதமராகப் பணி ஆற்றினார். அவரது நிர்வாகத்தின் திறமைக்காகவும், பரிசுத்தத்துக்காகவும், அவர் உத்தியோக வர்க்கத்தைச் சிறிதுகூடக் கட்சியுடன் சம்பந்தப்படுத்தாமல் நேர்மையாக நடத்தியதற்காகவும் ஏகமனதாகப் புகழப் பெற்றார்.

இரண்டாம் உலகப் போரின்போது மட்டும் காங்கிரஸ் மந்திரி சபைகள் ஆட்சிப் பொறுப்பை விடாமல், தமது சமூக — பொருளாதார சீர்திருத்தங்களைத் தொடர்ந்திருக்குமாயின், பிற்பாடு சமஷ்டி ஆட்சிப் பொறுப்பை விரைவில் ஏற்படுத்துவதற்காக வைஸ்ராயுடன் ஒரு மதிப்பு மிக்க ஸ்தானத்திலிருந்து பேச்சு வார்த்தை நடத்தியிருக்க முடியும். ஆனால் நடந்ததோ வேறு. காங்கிரஸின் இடதுசாரியினர் யுத்த காலத்தில் அக்கட்சியின் மந்திரி சபைகள் பதவியை விட்டு விலகியே ஆக வேண்டும் என்ற பெரும்பான்மை முடிவை உண்டாக்கி விட்டனர். யுத்த காலத்தில் இவ்வாறு நாம் பிரிட்டிஷாருடன் ஒத்துழையாமை செய்வதை ராஜாஜி ஏற்கவில்லை. இடதுசாரி யோசனையை அவர் ஆரம்பத்தில் எதிர்த்தார். ஆனால் அதுவே கட்சியின் பெரும்பான்மை முடிவானவுடனே,



R. S. M. சுந்தரம் (W. H. O. ஜெனிவா) அவர்கள் குமாரத்தி செள. ராஜேஸ்வரிக்கும் சென்னை ஸ்ரீ ராமச்சந்திர அய்யர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி R. நாராயணனுக்கும் திருமலை திருப்பதியில் திருமணம் சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அதையொட்டி சென்னை நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்ற வரவேற்பு வைபவத்துக்கும் ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

தலைவலி
உடனடியாக குணமாகிறது!






AM/7571

# அமிர்தாஞ்சனம்

**தலைவலி, ஜலதோஷம் மற்றும் வலிகளுக்கு நம்பகமான நிவாரணி**

அமிர்தாஞ்சனம் தலைவலி, உடல்வலி, தசைவலி, சுளுக்கு, ஜலதோஷம் இவற்றிலிருந்து உடனடியாக குணமளிக்கிறது. அமிர்தாஞ்சனம் தடவியதும் வலி மறைகிறது. பாட்டில்கள், சிக்கனமான ஜாடிகள், மற்றும் மலிவு விலை டப்பாக்களிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம் — பத்து மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்தது.

அமிர்தாஞ்சன் லிமிடெட்

---



சமையலுக்குச் சிறந்தது

# காமதேனு வனஸ்பதி



## காமதேனு

இருமுறை
சுத்திகரிக்கப்பட்ட
தாவர எண்ணெ





மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை-2 • சேலம் ஜில்லா • தமிழ் நாடு

தேசத்திலேயே முதலில் பதவி துறந்த மந்திரி சபை ராஜாஜியுடையதுதான்!

இரண்டாவது யுத்த காலத்தில் 1942ம் ஆண்டானது இந்தியாவைப் பொறுத்தமட்டில் பல கோணங்களிலிருந்து பார்த்தாலும் மிக மிக இருள் அடர்ந்த கட்டமாகும். கிரிப்ஸ் தூது தோல்வியுற்றது. தொடர்ந்து மிருந்த மனக் கசப்பும், ஆசாபங்கமும் உண்டாயின. வங்க விரிகுடா ஜப்பான் கடற்படையின் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. அதாவது சென்னை மாகாணக் கிழக்குக் கடற்கரை ஜப்பானின் தயவில் கிடந்தது. இத்தகைய இருட் சூழலில், காங்கிரஸ் — முஸ்லிம் லீக் பிணக்கைத் தீர்க்க ஜின்னாவுடன் ஏதேனும் இடைக்கால உடன்பாடு கண்டேயாக வேண்டும்; காங்கிரஸ் — லீக் இரண்டும் ஏகோபித்து வலியுறுத்தினாலே வெள்ளையர்களிடமிருந்து சுதந்திரத்துக்குத் தீர்வு காண முடியும் என்று ராஜாஜி கருதினார். இதற்காக இடர்ப்பாடு மிருந்ததாயினும் ஒரு பிரம்மப் பிரயத்தனம் செய்தேயாக வேண்டும் என்ற உணர்வினைப் பெற்றார். இதனால்தான் 1942 ஏப்ரில் முடிவில் அலகாபாத்தில் நடந்த அ. இ. கா. க. கூட்டத்தில் அவர் தேசப் பிரிவினையைக் கொள்கை அளவில் ஏற்றுக் கொண்டு, அதன் அம்சங்களை சகஜ நிலை உண்டான பின் வகுத்துக் கொள்ளலாம் என்று பிரேரணை செய்தார். இது காரணமாக அவர் காங்கிரஸ் பெரும்பான்மையின் ஆதரவை இழந்தார். வெகு ஜனங்களுக்கு வேண்டாதவராக ஆனார். அரசியலிலிருந்தே அவர் ஒதுங்க வேண்டிய அளவுக்கு ஆகிவிட்டது. இப்படிப்பட்ட நிலையையும் தன்னந் தனியாகத் தாங்கிக்கொண்டு தம் உறுதிப்பாட்டிலேயே நிற்கிற திரம் அவருக்கு இருந்தது!

இந்தியாவுக்கும் பிரிட்டனுக்குமிடையே மீண்டும் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கி வைக்க வேண்டும் என்பதற்காகப் பல முயற்சிகள் நடந்தன. இந்திய சுதந்திரத்துக்குச் சாதகமாக அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட் வெளியிட்ட கருத்துக்களுக்குக் காந்திஜி நிரம்ப முக்கியத்வம் தந்தார். அவரோடு கடிதத் தொடர்பு கொண்டார். யுத்த காலத்தில் உள்நாட்டு வாழ்வு ஸ்தம்பிக்கும் விதத்தில் சட்ட மறுப்புச் செய்யப் போவதில்லை என்றும் ரூஸ்வெல்டுக்கு காந்திஜி உறுதி கூறினார். ரூஸ்வெல்ட்டும் இதற்குப் பதிலாக, காங்கிரஸாரும் பிரிட்டிஷாரும் பரஸ்பர அனுதாபம் கொள்ள வேண்டும்எனக்கூறி, இவ்விஷயத்தில்நேர்மைக்காகவும் நியாயத்துக்காகவும் அமெரிக்கா பாடுபடுமென அந்தரங்க கடிதத்துடன் எழுதினார். ரூஸ்வெல்டின் இக்கடிதம் எழுதப்பட்ட ஐந்து அல்லது ஆறு நாட்களுக்குள் காந்திஜியின் கையில் கிடைத்திருக்க வேண்டும். ஆனால் மனமறிந்து செய்த சூழ்ச்சியினாலோ அல்லது அகஸ்மாத்தாகத்தானோ, ஆகஸ்ட் முதல் தேதி முத்திரையிட்ட இந்தக் கடிதம் செப்டம்பர் தொடக்கத்திலேயே புது தில்லி அமெரிக்கத் தூதரகத்திடம் ஒப்படைக்கப்பட்டது—இதைராஜாஜியிடம் பட்டுவாடா செய்ய வேண்டும்; காந்திஜி சிறையிலிருந்து விடுதலையானவுடன் ராஜாஜி இதை அவருக்குக் கொடுக்க வேண்டும் என்ற உத்தரவோடு கூட.

ஆனால் இதற்கு முன்பே, ஆகஸ்ட் இரண்டாம் வாரத்திலேயே, இந்தியாவில் நிலைமை முற்றி ''வெள்ளையனே வெளியேறு'' என்ற தீர்மானம் பம்பாயில் நிறைவேற்றப்பட்டுவிட்டது. தொடர்ந்து நாடெங்கிலும் கிளர்ச்சி மூண்டது. ரூஸ்வெல்டின் கடிதம் வந்து சேர்ந்தபோது, தேசத்திலிருந்த பிரிட்டிஷ் விரோத மனப்பான்மையின் காரணமாக அது அடியோடு பொருளற்றதாகி விட்டது.

ராஜாஜி 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் தொடர்பு கொள்ளவில்லை. முறிந்து போன பேச்சு வார்த்தைகளை உயிர்ப்பிக்கும் பொருட்டு அவர் ஸர் தேஜ்பஹாதுர் ஸாப்ருவுடன் நெருக்கமாகச் சேர்ந்து முயற்சிகள் மேற்கொண்டிருந்தார். ஆனால் அப்போது வைஸ்ராயாக இருந்த லின்லித்கோ இந்திய அரசாட்சியில் சட்டசபைக்கு மேலாக அவரது நிர்வாகக் கவுன்சிலர்களுக்கே முக்கியத்வம் தரவேண்டும் என்றும் அதிலும் உள் துறை-நிதி ஆகிய இரு துறைகளும் வெள்ளையர்களாக உள்ள கவுன்சிலர்களிடமே இருக்க வேண்டும் என்றும் பிடிவாதமாக இருந்ததால் ராஜாஜியும் ஸாப்ருவும் வகுத்த சமரஸத் திட்டங்கள் நிறைவேற வழியில்லாமற் போயிற்று.

சுதந்திர இயக்கத்துக்கு ராஜாஜி செய்த தொண்டு முழுவதையும் விவரிப்பது இக்கட்டுரையின் நோக்கமல்ல. சமாளிக்கவே முடியாததாகத் தோன்றிய நெருக்கடிச் சந்தர்ப்பங்களிலும் அவர் உணர்ச்சி வசப்படாத நிதானத்துடனும், தீர்க்க தரிசனத்துடனும் தீர்வுச் சூத்திரங்களை ஆக்கித் தந்தார் என்பதைக் கோடி காட்டுவதே இக்கட்டுரையின் லட்சியம். அந்தச் சூத்திரங்கள் மட்டும் அவ்வப்போது ஏற்கப்பட்டு அமலாகியிருக்குமாயின் பிரச்னைகள் தீர்ந்து உடன்பாடுகள் உண்டாகியிருக்கும். ஆனால் அநேக சந்தர்ப்பங்களில் அவருக்கு எதிர்ப்பாக இருந்த சக்திகளே வெல்ல முடியாத வீரியம் பெற்றிருந்தன. இருப்பினும் அவருக்கென்னவோ வெற்றி தோல்வி இரண்டுமே மனிதனின் மமதையைத் தூண்டிவிடும் இரு வேஷதாரிகளாகத்தான் இருந்தன. வெற்றி, தோல்வி இரண்டாலும் அவர் பாதிக்கப்படவில்லை.

தமிழாக்கம்: ரா. கணபதி

---

## தர்மலிங்கேசுவரருக்கு ஒரு சிவதருமம்

நங்கைநல்லூர் அருகிலுள்ள நங்கைகனாக்கு சேரியில் புராதனமானதும் தற்போது சிதிலமடைந்துள்ளதுமான ஸ்ரீ தர்மலிங்கேசுவரர் ஆலயத்தைப் புதுப்பிக்க, ஸர்வமங்களா ஸ்ரீ ராஜராஜேசுவரி ஆலய ஸ்தாபகர் ஸ்ரீ ராஜகோபால ஸ்வாமி அவர்கள் தலைமையில் திருப்பணிக் குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இக்கோவிலிலேயே ஸ்ரீ சத்ய நாராயணன் சன்னதியும் கட்டப்படவிருக்கிறது. செலவு ஒரு லட்ச ரூபாய் ஆகுமென மதிப்பிடப்படுகிறது. அன்பர்கள் அடியில் காணும் முகவரிக்குத் தாராளமாக வழங்கி இறையருள் பெறுவராக: திரு டி.டி. சுப்பிரமணியம், பொருளாளர், ஸ்ரீ தர்மலிங்கேசுவரர் ஆலயத் திருப்பணிக் குழு, 'இந்தியன் பாங்க்', 17, வடக்குக் கடற்கரைச்சாலை, சென்னை 600001.

# நல்ல டிரான்ஸ்ஃபார்மர்கள் உலகெல்லாம் பரவுவதை உங்களால் ஒருக்காலும் தடுக்க முடியாது.

நல்ல மனிதனின் முன்னேற்றத்தைத் தடுக்க முடியாது. அதேபோல் நம்பகமான, நல்ல டிரான்ஸ்ஃபார்மர்கள் நாலு இடங்களுக்குப் பரவுவதையும் நிறுத்த முடியாது.

இப்போது கடைசியாக எங்கள் டிரான்ஸ்ஃபார்மர்கள் போகுமிடம்—மலேசியா: கடுமையான சர்வதேசப் போட்டிக்கிடையே, 7.5 கோடி ரூபாய் பெறுமானமுள்ள இந்த ஆர்டரைக் கைப்பற்றிவிட்டது, போபாலிலுள்ள இந்தியாவின் மிகப் பெரிய கனரக மின் உற்பத்தி நிலையம்—அது மட்டுமா? இவற்றை நிறுவி இயக்குவதற்குத் தேவையான தொழில் நிபுணர்களையும் அனுப்பிவைக்கிறது.



எங்களிடம் கிடைக்கும் டிரான்ஸ்ஃபார்மர், உபரி உறுப்புக்களின் ரகங்கள் :



- 4,00,000 கிலோவோல்ட் ஆம்ப் வரை தரும் பவர் டிரான்ஸ்ஃபார்மர் ரகங்கள்—400 கிலோவோல்ட் வரை வோல்டேஜ் தாத் தக்கவை.
- அலுமினியம், இரசாயனம் மற்றும் இது போன்ற இதர தொழில்களில் டிராக்ஷன் டியூட்டி மற்றும் பலதரப்பட்ட ரெக்டிஃபையர் கருவிகளுக்குத் தேவையான விசேஷ டிரான்ஸ்ஃபார்மர்கள்.
- வோல்டேஜ் டிரான்ஸ்ஃபார்மர்கள்: மின்காந்த, மற்றும் கெபாஸிட்டர் வகை; தொடர்ந்து 1600 ஆம்ப்கள் வரை மின்சாரம் தாவல்ல கரண்ட் டிரான்ஸ்ஃபார்மர்கள்,...பிழை நிலை (பால்ட் லெவல்) 20 கிலோவோல்ட்டுக்கு 10,000 மெகாவோல்ட் ஆம்ப்.
- நாட்டில் தயாராகும் எல்லா வகையான டிரான்ஸ்ஃபார்மர்களுக்கும் ஏற்ற ஆன் லோட் டாப் சேஞ்சர்கள்.



## ஹெவி எலக்ட்ரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட்,

(இந்திய அரசுக்குச் சொந்தமானது)

போபால்.

மகத்தான சக்தி மக்களுக்கே







ராஜாஜி தம் வாழ்நாளில் இறுதியாகச் செய்த பணி "திக்கற்ற பார்வதி" என்ற தமது புகழ் பெற்ற கதையைத் திரைப்படமாக எடுக்கத் திரைப்பட இயக்குனர் திரு சிங்கீதம் சீனிவாச ராவ் அவர்களுக்கு மகிழ்ச்சியோடு அனுமதி அளித்ததுதான். அப்படம் வெகு வேகமாக உருவாகி வருகிறது. ஸ்ரீமதி லட்சுமி, ஸ்ரீகாந்த், பூர்ணம் விசுவநாதன், டைபிஸ்ட் கோபு, மகேந்திரா முதலிய பலர் நடிக்கிறார்கள். வீணை வித்வான் திரு சிட்டி பாபு படத்துக்குப் பின்னணி இசை அமைத்து, சங்கீதடைரக்ஷனும் செய்கிறார்.





# திக்கற்ற பார்வதி





# மடியில் மூட்டை



ஆத்தங்குடி சுவாமியாரின் ஆசிரமத்துக்கு ஒரு கிழவன் வந்தான். வணங்கி, ''நல்லுலகம் சேரும் வழியை எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று வேண்டினன்.

சுவாமியார் உபதேசப் பேச்சுக்கள் ஒன்றும் சொல்லவில்லை. ''இந்த ஊருக்கு நீர் வந்த காரியம் என்ன?'' என்று கேட்டார்.

''பேரனுக்கு ஒரு நல்ல இடம் பார்த்து விவாகம் செய்துவிடலாம் என்று பெண் பார்க்க வந்தேன்'' என்றுன் அவன்.

''அந்தக் காரியம் முடிந்ததா?'' என்று சுவாமியார் கேட்டார்.

''ஒருவாறு முடிந்தது'' என்றுன்.

''என்னிடம் ஏன் வந்தீர்?'' என்று கேட்டார் சுவாமியார்.

''எல்லாரும் உங்களிடம் உபதேசம் பெற்று வருவதாகச் சொன்னுர்கள். நானும் பார்த்துப் போகலாம் என்று வந்தேன்'' என்றுன்.

''வாரும்! ஆற்றங் கரைக்குப் போவோம்!'' என்று அவனையும் கூட்டிக்கொண்டு ஆற்றங் கரைக்குச் சென்றுர்.

அக்கரையில் பெரிய திருவிழா. இக்கரையில் உள்ள கிராமத்தார்கள் திரள் திரளாக ஆற்றங் கரையில் ஓடம் ஏறிச் செல்வதற்குக் கூடியிருந்தார்கள்.

''ஓடத்தில் பாரம் ஏற்றக் கூடாது. ஆட்கள் மட்டும்தான் ஏறலாம்'' என்றுன் படகோட்டி.

ஒரு குடியானவன் தன் மூட்டையை எடுத்துக் கொண்டு ஓடத்தில் ஏறப் போனபோது படகோட்டி இப்படி ஆட்சேபித்தான்.

''மூட்டையை நீ ஏற்றிக் கொள்ள வேண்டியதில்லை. என் மடியிலேயே வைத்துக் கொண்டு உட்காருகிறேன். ஏன் தடுக்கிருய்?'' என்றுன் குடியானவன்.

''நீ உன் மடியில் மூட்டையை வைத்துக்கொண்டு உட்காரலாம். ஆனல் உன் மூட்டையையும் உன்னையும் இரண்டையும் தாங்க வேண்டுமே இந்த ஓடம்? ஒவ்வொருவரும் இப்படியே மூட்டைகள் கொண்டு வந்து உட்கார்ந்தால் என்னுடைய ஓடம் மூழ்கிப் போகும்'' என்றுன் ஓடக்காரன்.

''மூட்டையை நான் என்ன செய்வேன்? மூட்டை யில்லாமல் நான் ஆறு தாண்டினுலும் என்ன பயன்?'' என்று குடியானவன் கவலைப்பட்டு வாதாடினுன்.

படகோட்டி மிகக் கண்டிப்பானவன். மூட்டைகள் ஓடத்தில் கூடவே கூடாது என்று சொல்லிவிட்டு, ''மூட்டைகள் வைத்திருப்பவர்கள் தயவுசெய்து இறங்கிவிட வேண்டும்'' என்றுன்.

சிலர் இறங்கி விட்டார்கள். வேறு சிலர் சத்திரத்து அதிகாரியிடம் மூட்டைகளை வைத்துவிட்டு வெறுங் கையாக ஓடத்தில் தைரியமாக ஏறினுர்கள்.

'மூட்டையை விட மாட்டோம்' என்றவர்கள் நின்று போனுர்கள்.

*சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்*



○ குஜராத்தியைப் படாடோபமான பாணியில் எழுதுவதே சரித்திர சம்பிரதாயமாக இருந்தபோது காந்திஜி அம்மொழியை மிக எளிமையான முறையில் கையாண்டு சாமானிய மக்களும் புரிந்துகொள்ளக் கூடிய வகையில் எழுதினார். அதேபோல் ராஜாஜியும் மிக எளிய தமிழில் அனைவருக்கும் புரியும் பாணியில் மிக உன்னதக் கருத்துக்களை வழங்கியுள்ளார். அவர் வேறு எதுவுமே செய்யாதிருந்திருந்தாலும் அவரது எழுத்துக்களே அவருக்கு நிலையான புகழைத் தேடித் தந்திருக்கும். ○

எச். வி. ஆர். அய்யங்கார்

ஓடம் நகர்ந்து விட்டது.

'' நம்முடைய மூட்டையை இன்னொருவர் கையில் எப்படிக் கொடுக்க முடியும்? திருவிழா முடிந்து போய் விடுமே? நாம் போவதற்கு இல்லாமல் போய்விட்டதே'' என்று வருந்தினார்கள்.

''அந்தப் படகு பாரம் தூக்கிச் செல்லாது. வெறுங் கையாகத்தான் ஏற வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா?'' என்றான் சத்திரத்து அதிகாரி.

''நான் என் மடியில் மூட்டையை வைத்துக் கொண்டு உட்கார்ந்தால் படகுக்கு என்ன பெரும் பாரமாய்ப் போகும்?'' என்று குடியானவன் கோபமாகப் பேசினான்.

மூர்க்கனோடு பேசிப் பயன் என்ன என்று அவனோடு யாரும் விவாதம் செய்யவில்லை.

'' பார்த்தீரா?'' என்றார் சுவாமியார்.

''பார்த்தேன். இதில் என்ன விசேஷம்?'' என்றான் பேரனுக்குப் பெண் பார்க்க வந்தவன்.

''நல்லுலகம் போய்ச் சேரும் வழி கேட்டீரே, அதற்கு நீர் முதலில் செய்ய வேண்டியது உம்முடைய மூட்டைகளை ஆண்டவனிடம் ஒப்புவித்துவிட வேண்டும். அதைச் செய்ய நீர் இஷ்டப்படுகிறீரா?'' என்றார்.

''வீட்டில் கிழவியிடம் யோசித்துத் தான் சொல்ல வேண்டும்!'' என்றான்.

'' திருவிழா முடிந்து போகுமே !'' என்றார் சுவாமியார்.





# ராஜாஜியின் காந்தி ஆசிரமம்

**-ஏ.கே. செட்டியார்.**

**ரா**ஜாஜி அவர்கள் ''பட்டதெல்லாம் போதும்'' என்ற கட்டுரையில் பின்வருமாறு எழுதுகிறார்:

நமக்குள் இரண்டு குரல்கள் பேசுகின்றன. ''அப்பா! இவ்வுலகம் அநித்யமானது; ஆதலால் உத்தமனாயிரு; நல்லவன் எனப் பெயரெடு; பாவி என நாமம் படையாதே; பிறருக்கு உபகாரம் செய்; பிறர் சுகப்பட வேண்டும் என்று நீ கஷ்டப்படு; உலக தர்மத்துக்காகப் பாடுபடு; தேசத்தை அடிமைத் தளையினின்று விடுவி; தைரியமாய் இருந்து போர் செய்'' என்கிறது.

இதற்குள் மற்றொரு குரல், ''அப்பா, யார் எப்படிப் போனால் உனக்கென்ன? உன் உயிருள்ள அளவும் நீ சுகமாய் இருப்பதைப் பார்; உன் சொந்த நலத்தைப் பார்த்துக் கொள்; பின்பு மற்றவர்களைப் பற்றிக் கவனிக்கலாம்; நீ அனுபவிக்கவே கடவுள் இவ்வுலகத்தில் சகல இன்பங்களையும், சுகங்களையும் சிருஷ்டித்திருக்கிறார்; சகல சுக போகங்களையும் அனுபவிக்காமல் இறந்துபோனால் மனித ஜன்மம் எடுத்து என்ன பயன்? உன் விஷயத்தில் நீ ஜாக்கிரதையோடிரு'' என்கிறது.

இவற்றில் எந்தக் குரலுக்கு 'ராஜாஜி' அவர்கள் செவிசாய்த்தார் என்பதை உலகம் நன்கறியும்.

'1922ல் ராஜாஜி அவர்கள் வேலூர்ச் சிறையிலிருந்து விடுதலையானார். சிறிது காலத்துக்குப் பிறகு திருச்செங்கோட்டுக்கு அருகில் காந்தி ஆசிரமம் நிறுவினார்.

## நவீன முனிவர்

**கா**ந்தி ஆசிரமத்தின் காரியதரிசி ஸ்ரீ க. சந்தானம் அவர்கள் ''ராஜாஜி'' என்ற நூலில் (ஹிந்துஸ்தான் வெளியீடு 1948) பின்வருமாறு எழுதுகிறார்:

ஓலைக் கூரையும் மண் சுவர்களும் கொண்ட பத்துப் பன்னிரண்டு குடிசைகள் அடங்கியதுதான் ஆசிரமம். ராஜாஜி தம் இளைய குமாரனுடனும் குமாரத்தியுடனும் அக் குடிசைகள் ஒன்றில் வசித்தார். அவருடைய சகாக்கள் பிற குடிசைகளில் வசித்தனர்.

ஆசிரம வாசிகளில் ஹிந்து சமூகத்திலுள்ள பல வகுப்பினரும் இருந்தனர். அவர்களில் இருவர் ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்தவர். எல்லோரும் ஒன்றாக உண்டு ஒரே குடும்பத்தினரைப் போல் வாழ்ந்து வந்தனர்.

அந்தக் கிராமக் குடியானவர்களுக்குச் சமபந்தி போஜனம் போன்ற காரியங்கள் பிடிக்கவில்லை. ஆகையால் சில காலம், அவர்கள் ஆசிரமத்துக்குப் பால், கறிகாய், அத்தியாவசியமான சாமான்கள் கொடுத்து வருவதை நிறுத்தி விட்டனர். ஆனால் ஆசிரமவாசிகள் கவலைப்படவில்லை.

குடியானவர்களின் பகிஷ்காரம் புகைந்து விட்டது. சீக்கிரத்தில் சுற்று வட்டாரத்திலிருந்த ஆடவரும் பெண்டிரும் ஆசிரமத்தைப் புனித யாத்திரை ஸ்தலமாகக் கருதி, அதன் தலைவரான ராஜாஜியை நவீன முனிவராக வணங்கினர்.

எழுத்துக் கூலிக்காரர்கள் காசு வாங்கிக் கொண்டு தஸ்தாவேஜு எழுதுவதால், கிராம மக்கள் தங்கள் பத்திரங்களை ராஜாஜியிடம் வந்து இலவசமாக எழுதிக் கொண்டு சென்றனர். கிராமச் சச்சரவுகளை ராஜாஜி சமரசமாகத் தீர்த்து வைத்தார். சில சமயம் கிராம மக்கள் சேவைக்காக இரவெல்லாம் கட்டை வண்டியில் பிரயாணம் செய்திருக்கிறார்.

## காந்தி ஆசிரமத் தொண்டு

**க**ல்கி ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், ''மழையைக் கட்டும் மாயை'' என்ற

மேலே: 'ராட்டனைச் சுற்றுங்கள், சுயராஜ்யம் வரும்' என்ற அண்ணலும் அவரது அருமைச் சீடரும்.
கீழே: விமோசனம் பத்திரிகை நடத்த ராஜாஜிக்கும் பக்கபலமாக இருந்தார் 'கல்கி' காந்தி ஆசிரமத்தில்.



கட்டுரையில் பின்வருமாறு எழுதுகிறார்:

காந்தி ஆசிரமம் திருச் செங்கோட்டுக்கு ஏழு மைல் தூரத்திலுள்ள புதுப்பாளையம் என்னும் கிராமத்தில் ஒரு விஸ்தாரமான தோட்டத்தில் அமைந்திருக்கிறது. இந்தத் தோட்டம் காலஞ் சென்ற மிட்டாதார் இரத்தின சபாபதிக் கவுண்டர் அளித்த நன்கொடையாகும்.

சென்ற ஒன்பது வருஷங்களில் நூற்கும் கூலி ரூ. 2,22,947ம் நெசவுக் கூலி ரூ. 2,24,872ம் சலவைக் கூலி ரூ. 12,865ம் சுற்றுப்புறக் கிராமவாசிகளுக்கு விநியோகிக்கப்பட்டிருக்கிறது.

(இந்தப் பணமெல்லாம் ஆசிரமத்தில் மரம் வைத்துக் காய்த்ததல்லவென்றும், நேயர்கள் கதராடைக்காகக் கொடுத்த பணம்தான் என்றும் சொல்ல வேண்டியதில்லை. எனவே, நாம் கதர்த் துணி வாங்குவதைப் பொறுத்துத்தான் ஆசிரமப் பணிகள் மேற்கொண்டு நீடித்து நடக்கும் என்பதையும் ஞாபகப் படுத்துகிறேன்.)



காந்தி ஆசிரமத் தலைவரும் காரியதரிசியும்
- சமீப காலத்திய படம்

இதைத் தவிர இலவச ஆஸ்பத்திரி, ஆறு இடங்களில் குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்த்து, சோப் போட்டுக் குளிப்பாட்டும் தொண்டு, ஹரிஜனக் குழந்தைகளுக்கு ஆறு கிராமங்களில் பள்ளிகள், மூன்று இராப் பள்ளிக்கூடங்களில், செருப்புத் தொழிற்சாலை முதலியன நடைபெறுகின்றன.

கொடிய பஞ்சம் பரவியிருந்த 1928ம் வருஷத்தில் ஏழைகளுக்குப் பாதி விலைக்குத் தானியங்கள் வரவழைத்துக் கொடுக்கப்பட்டது. இதற்காக ஆசிரமம் செலவிட்ட தொகை ரூ. 12,020.

மேற்படி புதுப்பாளையம் காந்தி ஆசிரமத்தில் சுமார் மூன்று வருஷ காலம் வசித்துத் தொண்டு செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. ஒற்றை வரி கன்னிக்கோட்டை ஓடு போட்ட கூரைக்கு அடியில் வெப்பத்தில் வெந்து கொண்டு, 'விமோசனம்' பத்திரிகைச் சந்தாதாரர்களின் விலாசம் எழுதிய நாட்களை நினைத்துச் சில சமயம் நான் பெருமூச்சு விடுவதுண்டு.

அதே கூரையின் அடியில் தமிழ்நாட்டுத் தலைவரும் வெந்து கொண்டிருந்தார் என்ற எண்ணம்தான் அந்த நாட்களின் மீது நான் அவ்வளவு பிரியம் கொள்வதற்குக் காரணம்.

## ஆசிரம வாழ்க்கை

காந்தி ஆசிரமத்தில் ஒரு மாதம் வசித்துப் பஞ்சு கொட்டல் முதலிய தொழில்களில் பயிற்சி பெற்ற தேசபக்தர் விருதுப்பட்டி க. பெ. சங்கரலிங்க நாடார் அவர்கள், தம் அனுபவங்களைத் திரு வி. க. அவர்களின், 'நவசக்தி' (26—2—1926)ல் எழுதியுள்ளார்:

ஆசிரம வாசிகள் அதிகாலை நாலரை மணிக்கு மணி அடித்தவுடன், படுக்கையை விட்டெழுந்து, காலைக் கடன் முடித்து, ஐந்து மணி அடித்தவுடன் எல்லோரும் ஓர் இடத்தில் உட்கார்ந்து காலைப் பிரார்த்தனை செய்கிறார்கள். அதன்பின் சிலர் தேகப் பயிற்சி செய்கிறார்கள். காலை ஆகாரம் ஆறரை மணி. ஏழு மணிக்கு அவரவர்க்குரிய வேலைகளுக்குச் சென்று ஊக்கத்துடன் செய்கிறார்கள்.

பதினொரு மணிக்குப் பகல் போஜனத்துக்காக மணி அடிக்கப் பெறுகிறது. ஒவ்வொருவருக்கும் ஈயம் பூசிய இலேசான பித்தளை வட்டிலும், ஒரு கிண்ணமும், ஒரு செம்பும் தனித் தனியாகக் கொடுக்கப் பெற்றிருக்கிறது. மேற்படி சாமான்களை அவரவர்களே துலக்கிச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். சாப்பாட்டு மணி அடித்தவுடன் ஸ்ரீமான் ஆச்சாரியார் அவர்கள் முதல் சகலரும் மேற்படி சாமான்களுடன் சாப்பாட்டு விடுதிக் குடிசைக்கு வந்து சமத்துவமாய் உட்கார்ந்து கொண்டு சந்தோஷத்துடன் சாப்பிடுகிறார்கள்.

போஜனம் முடிந்தவுடன் இரண்டு மணி வரை ஓய்வு. பின்னர் மீண்டும் வேலைக்குச் செல்கிறார்கள். மாலை ஐந்தரை மணிக்கு இரவு உணவு. இரவு ஏழு மணிக்குப் பிரார்த்தனை. பிறகு குறள் முதலியன படிக்கிறார்கள். அவை நன்றாய் மனத்தில் பதியும்படி ஸ்ரீமான் ஆச்சாரியாரவர்கள் விளக்கிச் சொல்கிறார்கள். இரவு பத்து மணிக்கு உறங்கச் செல்கின்றனர். படுப்பதற்கு ஒவ்வொருவருக்கும் கயிற்றினால் பின்னிய கட்டில் இருக்கிறது.

ஆசிரமவாசிகளில் இருவர் இருவராகச் சேர்ந்து, அங்குள்ள கக்கூசைத் தினம் சுத்தப்படுத்துவதென்ற முறை இருக்கிறது.

ஆசிரமவாசிகள் ஒவ்வொருவரும் வாரத்துக்குத் தாம் நூற்ற நூல் குறைந்தது ஐந்நூறு கஜமாவது சந்தாவாகச் செலுத்த வேண்டும்.

## ''கண்டறியாதன கண்டேன்''

அதிர்ஷ்டவசமாக ராஜாஜி அவர்களை ''காந்தி ஆசிரமம்'' என்ற தலைப்பில் திரு வி. க. அவர்களின் 'நவசக்தி' (11-9-25) இதழில் எழுதியுள்ளார்கள். அதில் சில பகுதிகள்:

கதரைப் பற்றிச் சொல் என்றும் புதுப் பாளையத்தைத்தான் நான் சொல்ல முடியும். இந்தப் புதுப் பாளையத்தில் "கண்டறியாதன கண்டேன்."

"ஐயா, புதுச் சீட்டு கொடுங்கோ!"

"என்னத்துக்குச் சீட்டு?"

"நீங்கள்தான் கொடுக்கிறீர்களாமே! புதுச் சீட்டு வேண்டும் நூற்பதற்கு. நானும் நூற்கலாம் என்று புதிதாய் வந்திருக்கிறேன், சீட்டுக் கொடுங்கள்?"

"இதற்குமுன் நூற்றாயா?"

"ஐயா! இல்லை. இப்போதுதான் வந்திருக்கிறேன், கொடுங்கள்."

"இவ்வளவு நாட்களாக நூற்காதவள் ஏன் இப்போது வந்தாய்?"

"ஊரில் எல்லோரும் நூற்கிறார்கள், நானும் நூற்கலாம் என்று வந்தேன்."

"இதற்கு முன்னால் என்ன செய்து கொண்டிருந்தாய்?"

"என் தங்கச்சி குழந்தையைப் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது சும்மாத்தான் இருக்கிறேன். வானம் இப்படிக் காய்த்துப் போய்விட்டதே! என்ன செய்கிறது? சும்மா இருந்தால் உப்பு மிளகாய் கஞ்சிக்கு என்ன பண்ணுகிறது? நூற்றால் எல்லோரையும்போல் நானும் நாலு பணம் சந்தைச் செலவுக்குச் சம்பாதித்துக் கொள்ளலாம் அல்லவா?"

புதுப்பாளையம் காந்தி ஆசிரமத்தில் நான் உட்கார்ந்திருக்கும் பாயின் பக்கத்தில் தினமும் நடக்கும் பேச்சு இது.

இதன் பொருள் என்ன? இந்த ஆசிரமத்தில் வாரம் ஒன்றுக்கு இரண்டாயிரம் ராத்தல் நூல் இப்போது கொண்டு வந்து தருகிறார்கள். வாரத்தில் நான்கு நாட்கள் இதற்காக ஒதுக்கி வைத்திருக்கிறோம். காலை ஐந்து மணி முதல் அந்தி வரையில் இடைவிடாமல் வேளாளத் தாய்மார்கள் கூட்டம் கூட்டமாக வந்து நூல் கழிகளைக் கொடுத்துப் பணமும் பஞ்சும் வாங்கிப் போகிறார்கள். நூல் கிடங்குக்குமுன் அவர்கள் போடும் கூட்டமும் இரைச்சலும், தலைமேல் கூடைகளை வைத்துக் கொண்டு கிட்டேரியில் எறும்பு வரிசைகளைப் போல் அவர்கள் நாள் முழுதும் (சிலர் பத்து மைல் தூரத்திலிருந்தும்) வருவதும் போவதுமான இந்தக் காட்சியைக் கண்டவர்கள் நாட்டின் வறுமையையும், கதரின் பெருமையையும் அறிவார்கள். "கூலி கட்டுமா?" "வேறு தொழிலில் இதைவிட லாபமில்லையா?" என்ற விதண்டாவாதக் கேள்விகளைக் கேட்க மாட்டார்கள்.

"நாங்கள் வேளாளர்களைவிட நன்றாய் நூற்போமே! எங்களுக்கும் கொடுங்களேன்?" என்று பஞ்சமத் தாய்மார்கள் சிலர் வந்தார்கள். இவர்களிடம் இராட்டை இல்லை, வில் இல்லை, ஒன்றுமில்லை. எல்லாம் உடைந்தும் தீக்கு இரையாயும் போயின. பசியும் பஞ்சமும் எரிக்கும்போது உணவுக்கு உதவாதது எதுதான் வீட்டில் நிற்கும்?

"எங்களுக்கு இராட்டை கொடுத்தால் நாங்களும் நூற்போம். நாமும் உங்கள் கஞ்சி குடிக்கலாமே?" என்றார்கள். கொங்கு நாட்டு வேளாளத் தாய்மார்கள் திரள் திரளாய்க் காந்தி மகாத்மாவின் திருவருளால் அவர்களுடைய குச்சு வீடுகளில் மூதேவியின் ஆட்சியைத் தொலைத்துத் திருமகளின் வரவைக் கண்டார்கள். அவ்விதமே பஞ்சமும் நோயும் இன்றி, வயிறு நிறைய உண்பதை என்றுமறியாத நமது பஞ்சமத் தாய்மார்களும் ஏன் மறுபடியும் இராட்டையைச் சுற்றி நூல் நூற்று, "தொழில் இல்லையே!" என்கிற பெரும் பேயைச் சேரிகளினின்று ஓட்டிவிடக் கூடாது? இப்போது ஒரு வாரமாய்ச் சில பஞ்சமப் பெண்கள் ஆசிரமத்தில் வந்து ஆசிரம ராட்டைகளைச் சுற்றி நூற்கப் பயிலுகிறார்கள். கடவுள் அருளால் இந்தத் திக்கற்ற ஜாதியாரின் குடிசைகளிலும் இராட்டைகள் உயிர் கொண்டு சுழலுவதைச் சீக்கிரம் காண்போமாக.

பறையர் நூல்தான் நல்ல நூல் என்ற நெசவுக்காரர்களின் சொல் உண்மை. அவர்கள் நூற்று வந்த இராட்டைகள் வேளாளர் இராட்டைகளைவிடப் பெரியவை. நல்ல முறுக்கு ஏறின நூல் நூற்பார்கள். சிறு நூலாகவும் இருக்கும். மேனான்கு குலத்தவர் உண்பது நாட்டிலும், கீழ் நான்கு குலத்தவர் உண்பது காட்டிலுமேன்? அனைவரும் மானமாய்ப் பிழைக்கலாம்.

ஆசிரமத்தைச் சுற்றியுள்ள கிராமங்களின் வாழ்வு எவ்வளவு மாறுதல் அடைந்திருக்கிறது என்பது முன்பின் பார்த்தவர்களுக்குத்தான் தெரியும். வீடுகளில் மூதேவிச் சோம்பலை இப்போது காண முடியாது. எங்கும் தொழில்; எங்கும் சீதேவி. பெய்ய வேண்டிய மழையை வானம் பெய்யவில்லை. ஆயினும் முகங்கள் நகைத்திருக்கின்றன.

நூற்கும் தாய்மார்களுக்கு மாத்திரம் ஒரு சேலைக்கு வேண்டிய நூல் கொண்டு வந்து கொடுத்தால், நெய் கூலி இல்லாமல் கட்டிக் கொள்ளச் சேலை ஆசிரமத்தில் கொடுக்கிறோம்.

## விளம்பரம்

திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்திலிருந்து ராஜாஜி அவர்கள் காரைக்குடி "ஊழியன்" ஆசிரியர் ஸ்ரீ ராய. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களுக்கு 5–12–1925ல் எழுதிய கடிதத்தில், "புதுப் பாளையத்து ஆசிரமத்துக் கதர் துணிகள் நேரிலாவது, இரங்கூன் காங்கிரஸ் வஸ்திராலயத்திலாவது கிடைக்கும் என்று 'ஊழியனி'ல் விளம்பரப் படுத்த முடியுமா?" என்று கேட்டிருக்கிறார்கள்.

'ஊழியன்' மட்டுமல்ல, தமிழ்நாட்டில் பல தமிழ்ப் பத்திரிகைகள் இந்த விளம்பரத்தை இலவசமாகப் பல முறை வெளியிட்டன. திரு வி. க. அவர்களின் 'நவசக்தி' 12–2–1926 இதழில் வெளியான விளம்பரம்:

சுவயம் கதர்:

ச. இராஜகோபாலாச்சாரியார் நடத்தும் புதுப்பாளையம் காந்தி ஆசிரமத்தில் உண்டாகும் கதர் துணிகள்.

புதுப்பாளையம் துப்பட்டி: இரட்டையிழை, நல்ல உறுதி 5½ முழ நீளம் 3 முழ அகலம் விலை: ரூ. 2—12—0

புதுப்பாளையம் துண்டு: இரட்டையிழை, பின்னல் நெசவு, மிக உறுதியானது:
3½ முழ × 28 அங்குலம் விலை: ரூ. 1—0—3
2½ முழ × 28 அங்குலம் விலை: ரூ. 0—12—3

புதுப்பாளையம் சொக்காய்த் துணி: நேர்த்தியான வெள்ளை, இரட்டையிழை கதர், தினப் பிரதி உபயோகத்துக்கு நல்ல துணி, 2 முழ அகலம் விலை: கெஜம்: 0—10—6.

சாதா வெள்ளை பீஸ் ஷர்ட்டுகளுக்கு:
1 1/4 கெஜ அகலம் திலுசுகள் விலை: 0—9—3
1 3/8 கெஜ அகல திலுசுகள் விலை: 0—10—6
1 1/2 கெஜ அகல திலுசுகள் விலை: 0—11—6

## பர்மா தமிழர்களுக்கு அறிவிப்பு:

இரங்கூன் காங்கிரஸ் கதர் நிலையத்தில் புதுப்பாளையம் ஆசிரமத் துணிகள் கிடைக்கும். விலைகள் கப்பல் முதலிய சார்ஜுக்காகக் கொஞ்சம் அதிகப்பட்டிருக்கும்.

தபால் விலாசம்:
காரியஸ்தர், காந்தி ஆசிரமம்
திருச்செங்கோடு போஸ்டு

இந்த விளம்பரத்தை ராஜாஜி அவர்களே எழுதியிருக்க வேண்டும். இதில் பகட்டான வார்த்தையோ, பொய்யான அடைமொழியோ, தேவையில்லாத வார்த்தையோ இல்லை.

## மதுவிலக்கு

மதுவிலக்கு என்றால் ராஜாஜி அவர்களுக்கு உயிர். அதற்காகவே 'விமோசனம்' என்ற அரிய மாதப் பத்திரிகையை நடத்தினார். அடிக்கடி தொண்டர்களுடன் கிராமங்களுக்குச் சென்று, மக்களுக்குப் புரியும் வகையில் மதுவிலக்குப் பிரசாரம் செய்தார்.

அகில இந்திய மதுவிலக்குச் சங்கத்தின் காரியதரிசியாகவும் ராஜாஜி அவர்கள் பல ஆண்டுகள் தொண்டு செய்தார். 'விமோசனம்' இதழ்களில் வெளியான சில செய்திகள் இவை:

அகில இந்திய மதுவிலக்குச் சங்கத்தின் போஷகர்களாக இதுவரையில் ஆக்ராவைச் சேர்ந்த ஸ்ரீமான் பாஸக், சேத் ஜம்னுலால் பஜாஜ், சென்னை ஸ்ரீமான் ராமநாத்கோயங்கா இம்மூவரும் இருந்து வந்தார்கள். இப்போது மதுரை ஸ்ரீமான் ஏ. வைத்தியநாதய்யர் அவர்களும் போஷகர் ஆகியிருக்கிறார்கள்.

பூரண மதுவிலக்குக் கொள்கையை ஒப்புக் கொண்டு வரும் ஐந்து ரூபாய் சந்தாக் கட்டுபவர்கள் சங்கத்தில் அங்கத்தினராய்ச் சேரலாம். அங்கத்தினர்களுக்கு ஆங்கிலத்தில் உள்ள 'Prohibition' பத்திரிகையாவது 'விமோசனம்' பத்திரிகையாவது அவர்கள் விருப்பம் போல் தனிச் சந்தா இன்றி அனுப்பப்படும்.

பின்வரும் நண்பர்கள் அகில இந்திய மதுவிலக்குச் சங்கத்தில் (குறிப்பிட்ட இரண்டு மாதங்களில்) சந்தாதாரராய்ச் சேர்ந்திருக்கிறார்கள்.

## சுதந்திரத்தில் ஒரு கட்டாயமா?

நாடெங்கும் இலவசமாகவும் கட்டாயமாகவும் அடிப்படைக் கல்வி பரவ ஒரு திட்டம் 1937-38 ஆண்டு வாக்கில் வகுக்கப்பட்டது. இதன் ஆய்வுக் குழுவில் புகழ்பெற்ற கல்வித்துறை இயக்குனர் ஒருவர் இருந்தார். பேச்சினிடையே, அவர் என்னைக் கேட்ட ஒரு கேள்வியால் அதிர்ச்சியடைந்து விட்டேன் நான்.

''சுதந்திரத்தை நாடிப் போரிட்டு நிற்கும் நாடு இது. இதிலே நீங்கள் ஒரு கட்டாய முறையை எல்லோர் மீதும் திணிக்கப் பார்க்கிறீர்களே!'' என்றார் அவர். கல்வி பற்றி இப்படி ஒரு கருத்துக் கொண்டோரும் இருந்தனர்!

ஜாகிர் ஹுசேன் எழுதிய ஒரு நூலிலிருந்து
தகவல்: தம்பி சீனிவாசன்

---

1. ஸ்ரீமான் எஸ். இராமச்சந்திரன் — இரங்கூன்
2. ,, வஸந்தலால் ஹீராபாய் — ஹைதராபாத்
3. ,, கே. வி. இராமசாமி ஐயர் — மதுரை
4. ,, ஜி.வி.முத்துசாமி செட்டியார் — மதுரை
5. ,, கொ. அ. பெத்த ராஜா — ராஜபாளையம்
6. ,, கே. டி. பால் —சேலம்
7. ,, டி. பி. கைதான் —கல்கத்தா
8. ,, பி. கனேரியா —கல்கத்தா
9. ,, எச். பி. பகாரியா —கல்கத்தா
10. ,, ஜி. டி. லோயால்கா—கல்கத்தா
11. ,, ஆர். கே. கனேரியா — கல்கத்தா
12. ,, திருவி. கல்யாணசுந்தர முதலியார் —சென்னை
13. ,, எஸ். முத்துசாமி —மாம்பலம்
14. ,, பரலி. சு. நெல்லையப்பர் — சென்னை
15. ,, எஸ். எஸ். வாஸன் —சென்னை
16. டாக்டர் எஸ். பி. ஷராப் —டில்லி
17. பண்டித மன்மத்நாத் தார் —டில்லி
18. ஜனாப் ஸையது ஹுசேன் —மீரட்
19. ஸ்ரீமான் குமார சங்கானந்த ஸின்ஹ — ஸ்ரீநகர்
20. ,, எஸ். அவிநாசிலிங்கம் — கோவை
21. ,, க. பெ. சங்கரலிங்கம் — விருதுநகர்

## ''தியாகத்தில் சக்கரவர்த்தி''

திரு வி. க. அவர்கள் தம் 'நவசக்தி' 23—12—1921 தலையங்கத்தில் பின்வருமாறு எழுதுகிறார்:

''அரசர் போலிருந்த ஆச்சாரியார் இப்பொழுது ஆண்டி போலாகி நலங்களைத் துறந்ததற்குக் கருவியாக இருந்தது எது? அவர்பாலிருந்த செல்வமா? இருக்கும் கல்வியா? கூர்த்த மதியா? வக்கீல் தொழில் திறமையா? பின்னை எது? அவர்பாலிருக்கும் ஒழுக்கமென்றே கூறலாம். ஒரு மனிதனது தியாகத்துக்குக் கருவி அவன்பாலுள்ள ஒழுக்கமென்று கூறுவது மிகையாகாது. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரைத் தியாகத்தில் சக்கரவர்த்தியாக்கியது அவரிடத்தில் உள்ள ஒழுக்கமேயாகும்.''



# உயர்ந்த

இராப் போதையில் அரண்மனை நித்திரை மயக்கம் கொண்டு நிம்மதியாய் உறங்கியது. அலைமோதிய நிலவுடன் தீபங்கள் அழிந்து பட்டு வரும் விஜயநகரத்தின் கதையைச் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தன. மன்னர் அச்சுத தேவராயர் மட்டும் விழி மறுத்த நித்திரைக்கு விளக்கம் புரியாமல் கலக்கமே வடிவாகச் சாளரத்தை நோக்கி நடந்தார். தென்திசை விசாலமாகத் தெரிந்தது. மன்னர் அடிக்கடி நெற்றியைச் சுழித்துக் கொள்வதையும் பெருமூச்சு பறிவதையும் படுக்கையில் இருந்தவாறே கவனித்த அரசி திருமலாம்பாள் மெல்ல எழுந்து அருகே வந்தாள். கால் சதங்கையொலி கேட்டுத் திரும்பிப் பார்த்தார் அச்சுத தேவராயர். அவருடைய முகத்தில் பலவிதமான சிந்தனைக் கோடுகள். செவ்விய தீப ஒளியில் அவை சிக்கல்கள் பலவற்றை எடுத்துக்காட்டுவன போலத் தென்பட்டன.

இரவின் மூன்றாம் யாமத்தை அறிவிக்கக் கோட்டை மணி ஓசை எழுப்பியது.

"பிரபு! ஒரு வாரமாகவே இப்படித் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டிருந்தால் உங்கள் உடம்பு என்னாவது?" — மனைவிக்குரிய கரிசனம் அன்பாகச் சொற்களில் வெளிப்பட்டது.

சிவந்திருந்த கண்களில் கனிவைத் தேக்கிப் பட்டத்தரசியை நோக்கினார் அச்சுத தேவராயர். உதடுகளில் வெறுமையாகப் புன்னகை நெளிந்தது. சற்றே தோள்களை அசைத்துக் கொடுத்துப் பட்டத்தரசியின் அருகே வந்தார்.

"திருமலா! தூக்கம் கெடுக்கும் அரசியல் பிரச்னைகள் சாகும்வரையில் தொடர்ந்துவந்து கொண்டிருப்பன. ஆட்சியிலிருப்பவர்களுக்கு அது ஒரு காச நோய் போன்றது. நான் இப்போது துக்கப்பட்டுக் கொண்டிருப்பது நம்முடைய விசுவநாதனைப் பற்றி! மூர்த்தியம்மாளை மணக்க முடியாது என்று எவ்வளவு மூர்க்கத்தனமாகச் சொல்லிவிட்டான்."

குறும்பலாகச் சின்னஞ்சிறு சிரிப்பொன்று திருமலாம்பாள் நெஞ்சத்திலிருந்து உதிர்ந்தது.

"பிரபோ! எனக்கும் அதுதானே புரியவில்லை. விசுவாசம் நிறைந்தவன் விசுவநாதன் என்று நாமெல்லாம் நினைக்கப் போக, இப்படி மன்னருடைய அன்புக் கட்டளையை ஒருமுறைக்கு இருமுறை புறக்கணித்துவிட்டானே! ஒரு விஷயத்தை நானும் மறைத்தேன்...."

"என்ன திருமலா!"

''நானுகவும் ஓர் ஓலை எழுதி அனுப்பி வைத்தேன்.''

''அப்படியா !''

''ஆமாம்; 'மன்னித்து விடுங்கள்' என்று மறுத்து எழுதி விட்டான்.''

அச்சுத தேவராயர் அகத்தில் தீ மூண்டது.

'' செருக்கேறி விட்டது. திருமலா ! மதுரை மாநகரை அவனிடமிருந்து பறிக்க எவ்வளவு நேரம் பிடிக்கும்? மறந்து, மதி கெட்டு, மதோன்மத்தம் பிடித்து நடக்கிறான். நானே அந்த ராஜப்பிரதிநிதி பதவியைப் பிடுங்கி நம் சேவப்பனுக்குத் தருகிறேன்.''

கண்கள் கனன்று மீசை துடித்தது அச்சுத தேவராயருக்கு.

திருமலாம்பாள் அமைதியாகச் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறாய்?''

# மனிதன்

''கோபம் எரிக்கும்; குளிர வைக்காது. ஏனென்றால் அதற்குச் சிந்தனை கிடையாது.''

'' என் கோபத்தை மீண்டும் தூண்டுகிறாய்.''

''இல்லை, குளிர வைக்கிறேன். பிரபோ ! தமிழ் மக்கள் விசுவநாதன் மீது எவ்வளவுக்கு அன்பு செலுத்துகிறார்கள் என்பதைத் தெரிந்துமா இப்படிப் பேசுகிறீர்கள்! ஒரு தெலுங்கன் ஆள்கிறான் என்பதையே மறந்து 'விசுவநாத நாயக்கன் வாழ்க' என்று கோஷமிடுகிறார்கள். அந்த நாட்டுக்காக அவன் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறான். தந்தையென்றும் பாராமல் சிறைப் பிடித்தவனல்லவா? நேர்மையைப் பொறுத்த மட்டில் அவன் பரிபூரண மனிதன்.''

அச்சுத தேவராயர் சற்றே அமைதி கண்டார். ''எல்லாம் அந்தத் தளவாய் அரியநாத முதலியாரிடம் பயின்ற குணங்கள். குரு காணிக்கையாக அவன் தமிழகத்தைக் கோயிலாகக் கொண்டுவிட்டான்.''

'' நல்லதுதானே! நம் மூர்த்தியம்மாளை மணக்க மறுத்துவிட்டான் என்பதாலேயே அவனுடைய முக்கிய குணங்களைப் புறக்கணிக்கக் கூடாது.''

''மணப்பதால் அவனுக்கென்ன நஷ்டம்?''

''வாழ்க்கை என்பது அவனுக்குச் சொந்தமானது. வேறு முடிவு காணச் சிந்தியுங்கள்.''

''முடிவு காண்பதென்ன ? கண்டாய்விட்டது. சேவப்பனுக்கு மூர்த்தியம்மாளைக் கொடுக்க முடிவு செய்துவிட்டேன்.''

திருமலாம்பாள் திகைத்தாள்.

'' சின்னஞ்சிறு பதவி வகிப்பவனுக்கா?''

'' இல்லை; திருமணச் சீதனமாகத் தமிழகத்தின் தஞ்சைப் பகுதிக்கு அவனைப் பிரதிநிதியாக்கத் தீர்மானித்துவிட்டேன்.''

'' சிந்தித்துத்தானே முடிவு....?''

''முடிவு, முடிவுதான் ! பரந்த தமிழகத்துக்கு ஒரே ஒரு பிரதிநிதி போதாது.''

ஒருபுறம் மகிழ்ச்சியானாலும் மறுபுறம் வேதனையாகத்தான் இருந்தது திருமலாம்பாளுக்கு! மெல்லக் கணவரை அழைத்துக் கொண்டு நித்திரை வாயிலைத் திறக்க முனைந்தாள்.

இதயச் சிறகின் இறகுகள் ஒவ்வொன்றாய் உதிர்வனபோல் ஓர் உணர்வு; மயக்கம் கண்டாள் மூர்த்தியம்மாள். இரத்த ஓட்டம் நின்று உறைந்தது. நாளங்கள் நடுமாற நாடிகள் துடித்தன. கனவில் வண்ண ஓவியமாகத் தீட்டி வந்த விசுவநாத உருவம் அழிந்துபட்டதில் அவளுக்கு ஓர் அலைமோதல். எப்படியும் மன்னர் தம் அதிகாரத்தைப் பயன்படுத்தி இந்தத் திருமணத்தை முடித்துவிடுவார் என்றுதான் நம்பினாள். ஆனால் சேவப்ப நாயக்கனுக்கு வாழ்க்கைப்பட நேர்ந்து விட்டதே !

முடிவாகத் தமக்கையிடம் சென்று வாதிட்டுப் பார்த்துவிடுவதென்று மேன் மாடம் நோக்கி நடந்தாள். அவளுக்கு மட்டுந்தானா இந்த அலைமோதல்? அரசி திருமலாம்பாளுக்கும் இருக்கத்தான் செய்தது. உடன் பிறந்த தங்கையல்லவா ? தன்னைப் போல்

## கோவி. மணிசேகரன்



ரேகா










ஒரு மன்னனுக்கு வாழ்க்கைப்படா விட்டாலும், தமிழகத்தின் முடிசூடா மன்னன் போல் ஆட்சி புரியும் விசுவநாத நாயக்கனுக்காவது வாழ்க்கைப்படட்டும் என்று ஆசை வைத்தாள். ஆசைகள் மனிதரோடு பிறக்கலாம். நிறைவேற்றி வைப்பது காலத்தோடு பிறப்பதல்லவா? இல்லையென்றால் விதி என்ற சொல் அர்த்தமில்லாமல் போய்விடுமே!

''அக்கா !''

தமக்கை மூலம் சேவப்பன் திருமணத்துக்குப் பிறகு தஞ்சைப் பதியாகிறார் என்பதை அறிந்து தன்னை மறுத்த மதுரைப் பிரதிநிதி விசுவநாத நாயக்கனைப் பழி வாங்கிவிட்டதாகவே பூரித்துக் கொண்டாள்.

திருமண நாள் நிச்சயிக்கப்பட்டது.

சிற்றரசர்கள் பலர் வருகை தந்தவண்ணம் இருந்தனர்.

பொழுது விடிந்தால் திருமணம். மதுரையிலிருந்து விசுவநாத நாயக்கனும் வந்துவிட்டான். விஜயநகரமே கோலாகலத்தில் மூழ்கியிருந்தது.

தலைநகரை அடைந்ததும் முதற் கண்ணாக மன்னர் அச்சுத தேவராயரைக் கண்டு காணிக்கை செலுத்தி வணங்கினான் விசுவநாத நாயக்கன். மன்னர் தன்னை அலட்சியமாக வரவேற்றதை அவனால் சகித்துக் கொள்ள முடியவில்லை. ஆனாலும் அவன் சேவப்ப நாயக்கனைக் கண்டு உள்ளப் பூரிப்புடன் மகிழ்ச்சியைத் தெரிவித்தான். இதனை யாருமே எதிர்பார்க்கவில்லை. தனக்குப் போட்டியாக ஒரு பிரதிநிதி தமிழகத்துக்குள் நுழையப் போகிறான் என்பதையறிந்தும் அவன் கிஞ்சித்தும் மனக் குரோதம் கொள்ளாதது பலருக்கு வியப்பைத் தூண்டியது.

ஏன்? சேவப்ப நாயக்கனே ஒரு கணம் மருண்டு தனக்குள் அதுவரையில் கல்லாய் அழுந்திப் பாரமாகத் தெரிந்த அச்சம் அகல நோக்கி அமைதி கண்டான்.

பொழுதும் விடிந்தது; பொற்றாலி ஏறியது! அழுது வடிந்த மூர்த்தியம்மாளும் அகமகிழ்ந்து முகம் மலர்ந்தாள்.

காலக் கிளையிலிருந்து நாளிதழ்கள் ஏழு, சருகாய் உதிர்ந்து பறந்தன.

காலைக் கதிரவன் இதமான வெப்பத்துடன் பயணமாகிக் கொண்டிருந்தான். விசுவநாத நாயக்கனும் சற்றைக்கெல்லாம் சந்தனத் தமிழ் மணக்கும் மதுரைக்குப் பயணமாக ஆயத்தமாய்க் கொண்டிருந்தான்.

மன்னர் அச்சுத தேவராயரிடம் சொல்லிக் கொண்டு புறப்பட அரண்மனையை அடைந்தான். திருமணச் சந்தடி இன்னும் ஓயாமல் தான் இருந்தது.

விசுவநாத நாயக்கனைக் கண்டதும் முகத்தைச் சுளித்துக் கொண்டார் மன்னர். வந்தது முதல் அவர்தான் வாய் திறந்து இன்னும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே!

''மன்னர் பெருமானே! விசுவநாதன் விடைபெற வந்திருக்கிறேன்.''

''ம்ம்ம்...!''

விசுவநாதனுடைய கண்கள் கலங்கிவிட்டன. விசுவாசம் அவனை விக்கியழச் செய்துவிட்டது. ஆனாலும் அடக்கிக் கொண்டான். மாமன்னர் கிருஷ்ண தேவராயரால் வளர்க்கப்பட்ட அன்பு மகனல்லவா விசுவநாத நாயக்கன்!

துக்கத்தை அடக்கிக் கொண்டு மேலும் சொன்னான்: ''மன்னர் பெருமானே! சேவப்பன் என்று தஞ்சைக்கு வருகிறான் என்பதை முன்கூட்டி அறிவித்தால் தக்க சிறப்புக்களுடன் நானே அவனை வரவேற்று ஆவன செய்வேன்.''

சிறு அதிர்ச்சியுடன் அச்சுத தேவராயருடைய கண்கள் அண்ணாந்து அவனை நோக்கின. அருகில் இருந்த அரசி திருமலாம்மாள் அதைக் கவனித்தாள். அவளுடைய கண்களில் நீர் திரையிட்டு விட்டது. விசுவநாதன் பேரில் அவளுக்கு அளவு கடந்த அன்புண்டு. அவள் கேட்டாள்:

''விசுவநாத நாயக்கரே! நான் ஒன்று உங்களைக் கேட்கலாமா?''

''கேளுங்கள் தாயே!'' — நெஞ்சு மேலும் விம்மியது விசுவநாத நாயக்கனுக்கு!

''முடிந்துபோன விஷயமானாலும் மூர்த்தியம்மாளை நீர் மறுத்ததற்கான சரியான காரணம் மன்னருக்குத் தெரிய வேண்டியது அவசியமில்லாவிட்டாலும், எனக்குத் தெரிந்தே ஆக வேண்டும்!''

ஒரு கணம் விழித்தான் விசுவநாத நாயக்கன்.

''சொல்லித்தானாக வேண்டுமா, தாயே?''

''நிச்சயமாக!''

# முக்கிய இடங்களில் நிர்கார்ட் வலிமை

NSFC (என் எஸ் எஃப் ஸி) இப்போது உங்களுக்குத் தயாரித்து வழங்குகிறது நிர்கார்ட். நிர்கார்ட் இந்தியாவின் முதல் நைலான் டயர் கார்ட். அது மிக்க வலிமையுள்ளது.நீடித்து உழைக்கக் கூடியது.

இதே நைலான் டயர் கார்ட்தான் கனவாகன டயர் உற்பத்தி பாதுகாப்பில் பெரும் முக்கிய பங்கு வகிக்கிறது. இது உட்புறத்திலே கனமான சட்டம் போன்ற வலுவைத் தருகிறது.



**nircord®**

**இந்தியாவின் முதல்**
**நைலான் டயர் கார்ட்**

**நிர்லான் ஸிந்தெடிக் ஃபைபர்ஸ் & கெமிகல்ஸ் லிமிடெட்**
115, மகாத்மா காந்தி ரோடு, பம்பாய்-1

® ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்.

Interpub/NIR-C-31A/71 Tm

உங்கள் குடும்பத்தினரின்
உடல்நலம் ஓங்கியிருக்க
அவசியம் அளியுங்கள் மிகச்
சிறந்ததையே

# அவர்களுக்கு விவா கொடுங்கள்.




ASP/JIL-V-IA/73 TAM

விவா நூதன உணவு தொழில் நுட்பத்திறமையில் உருவானது. இதில் மற்ற ஆரோக்கிய உணவுப் பானங்களில் உள்ளதைப்போன்று தூய்மையான, முழுமை பெற்ற ஆடைப்பாலும் பார்லி மால்ட்டும் உள்ளன. ஆயினும் விவாவில் மட்டுமே கோதுமை மால்ட் அடங்கியுள்ளது.

கோதுமை மால்ட் எதற்கு?

எதற்கெனில், அதில் வளமைமிக்க கார்போஹைட்ரேட், புரதங்கள், விடமின்கள் மற்றும் கனிஜ சத்துக்கள் எளிதில் சீரணிக்கும் வகையில் சேர்க்கப்பட்டுள்ளன.

கோதுமை மால்ட் கலந்திருப்பதால் விவா அதிக அளவு ஊட்டச்சத்து உள்ளதாய், பூரணமான இன்சுவையோடு, வசீகர பொன்னிறம் கொண்டு, உடனடியாகக் கரையும் தன்மையோடு விளங்குகிறது.

ஆகவே, உங்கள் அன்றாட உணவிலுள்ள பற்றாக்குறைகளை ஈடுசெய்ய சரியான, போதுமான ஊட்டச் சத்து அளிக்கவேண்டுமென்றால் அதற்கு விவா போல வேறு எதுவும் சிறந்ததல்ல

மிகச் சிறந்ததையே தேர்ந்தெடுக்க இதோ அரியதொரு வாய்ப்பு.

விவாவையே தேர்ந்தெடுங்கள்.



இந்தியாவில் தயாரிப்போர்:
ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

# விவா

உற்சாகமான ஆரோக்கிய வளர்ச்சிக்கு தினமும் விவா.

''தாயே! முதலில் இப்படி அழைக்கிற ஒரு புனிதமான சொல் என் நாவிலிருந்து நழுவி விடும்.''

''ஏன்?''

''நான் மூர்த்தியம்மாளை மணந்தால், மன்னர் எனக்குச் சகலையாகி விடுகிறார். நான் அவரைத் தெய்வமாகவே வணங்க ஆசைப்படுகிறேன். நீங்கள் எனக்கு மதனியாகி விடுகிறீர்கள். எப்படிப் பார்த்தாலும் தாய் ஸ்தானம் தாழ்ந்து விடுகிறது. உறவால் மதிப்புக் குறைவதை விட உள்ளத்தால் மரியாதைகள் பெருகி நிற்க வேண்டும் என்பதற்காகவே மறுத்தேன். இத்தனைக்கும் மேலாகத் தமிழ் மக்கள் இந்த இளம் பெண் திருமணத்தை வைத்து என்னை ஏது எதற்கோ ஆசைப்படுவதாகத் தரக்குறைவாக எண்ணி விடக் கூடாதல்லவா?''

விசுவநாத நாயக்கனுடைய கண்களில் நீர் தாரையிட்ட வண்ணம் இருந்தது.

''விசுவநாதா!'' என்று உணர்ச்சி பொங்க அழைத்தவராய் அவனை அன்புடன் அணைத்துக் கொண்டார், மன்னர் அச்சுத தேவராயர்.

''விசுவநாதா! நீ ராஜப் பிரதிநிதி மட்டுமல்ல, உண்மையான ராஜ விசுவாசியுங்கூட. நான் உன்னைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. அதனால் நீ என்னிலும் மேம்பட்டவன்!'' என்றார்.

''மன்னவா!''

''பரிபூரணமாகச் சொல்லுகிறேன். இப்போது சொல்! தமிழகத்துக்கு நீ ஒருவனே போதும் என்று நினைக்கிறேன். தஞ்சை சேவப்பனுக்குத் தேவைதானா?''

''தேவைதான்! தஞ்சைக்கு மட்டும் சேவப்பன் தேவை என்பதில்லை; எனக்கும் ஒரு துணைவன் தேவைப்படுகிறான்!''

''ஆந்திர சாம்ராஜ்யத்தை விட உன் இதயம் விசாலமானது. தெலுங்கினமே உன்னைக் கண்டு பெருமைப்படுகிறது.''

சிரம் தாழ்த்தி வணங்கினான் காவிரியின் நீர் பருகி, மதுரையின் மணம் நுகர்ந்து கனிந்த தமிழின் கற்கண்டுச் சுவை கண்ட சுந்தரத் தெலுங்கன் விசுவநாத நாயக்கன்.

## அகத்தின் இருள் அகற்றிடவே

கலாபாரதி

அகத்து இருள்
அகற்றிடவே
அகல்விளக்கு நீயம்
சகத்துயிர்கள்
சுகம் பெறவே
ஏகம் ஏகமாய்த் நீயம்!

தாரணியில்
அருளொளிரு
வரும் பரணி நீயம்
சாதினிக்கில்
பரம் பொருளாய்
வரமளிக்கும் நீயம்!

நிலவானில்
கோலமதி
பாலொளிபோல் நீயம்
மாலையிலே
அகத்தின்
அழுக்கிருக்கு நீயம்!

கண்கவரும்
வண்ண உடைப்
பெண்களொளிரும் நீயம்
பொன்னொளிர்வாம்
விண்ணுலகும்
அண்ணுமலை நீயம்!

கார்த்திகையில்
கோத்திடுவோம்
நேர்த்திமிகு கவிதை
ஈர்த்திமிகு முகம்
மூர்த்திதனுக்
காத்திகையில் பெறுவோம்!

சாரா

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031

Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka [illegible] 50 [illegible]



